இவ்விதழில்
ஸ்ரீ. ரா. எழுதிய
மேற்கே
இந்திய
இலக்கியம்

# சிவாஜி

அடுத்த இதழில்
★
புதிய அம்சங்களை
எதிர்பாருங்கள்
★

ஆசிரியர் :
டி. சிவஞானம்

The 'SHIVAJI'-Published Every Sunday

ஞாயிறு வெளியீடு

மாலை 10 | திருச்சி 29—4—1945 பார்த்திப-ஸூ சித்திரை-மீ 17-வ ஞாயிற்றுக்கிழமை | மணி 23




எதிர்க்க முடியாத நேசநாட்டினர் சக்தி ஜெர்மன் தலைநகரான பெர்லின் நகரத்திற்குள் நேசப்படைகள் பிரவேசித்துவிட்டன. எதிர்க்க முடியாத நேசநாட்டினர் சக்தி உருண்டு வருகிறது. ஹிட்லர் அதை தடுக்க குட்டிகாணம் அடிக்கிறார்.



ஜெர்மனியரிடமிருந்து பிடிக்கப்பட்ட பிரதேசமொன்றில் நாஜி கைதிகள் தலைமீது கை வைத்துக்கொண்டு பாழடைந்த ஜெர்மன் கிராமம் ஒன்றில் நடத்தி செல்லப்படுகிறார்கள்.



யுத்தமுனையில் காயமடைந்த வீரர்களை புதிதாகக்கண்டுபிடிக்கப்பட்ட பனிக்கட்டி பிரதேசங்களில் இழுத்துச்செல்லும் 'ஸ்லெட் லிட்டர்' என்ற சறுக்குப்பலகையில் சிகிச்சை ஸ்தலங்களுக்கு எடுத்துச் செல்லப்படும் காட்சியை இது காட்டுகிறது.



மத விஷயம்—3

# ★ வேதங்கள் ★

"கரிச்சான் குஞ்சு"

ஆரம்ப காலத்தில், அறிவுதரும் பொருளுரைக்கும் நூலுக்குப் பெயராயிருந்தது 'வேதம்' என்ற சொல். ஆனால் காலப் போக்கில், வளர்ந்து நிச்சயமான ஒரு உருவத்தோடு நிற்கும் குறிப்பிட்ட நூல் தொகுதிக்குப் பெயராயிற்று அது.

மேலே சொன்ன நூல் தொகுதியின் வயது மூவாயிரம் (300) வருஷங்கள். நான்கு தொகையாய், ருக், யஜுஸ், ஸாம, அதர்வ என்று பெயர்பெற்று இன்றைக்கும் பல்லாயிரம் அந்தணர்களின் வாய்முகத்திலேயே நிலைத்திருக்கின்றன அவை. இங்கு, நான்காவதாகிய 'அதர்வ' வேதத்தை விலக்கிவிட வேண்டும்; ஏன் என்றால், அது மிகச் சமீபகாலத்தில் வேத கோஷ்டியில் சேர்க்கப்பட்டது; அதுவும் ரொம்ப சிரமப்பட்டு. மற்ற மூன்றுக்கும் அதற்கும் துளியளவாவது எந்தத் தொடர்பும் கிடையாது; ஆக முதல் மூன்றையே வேதங்கள் எனக் கொள்வதுதான் உசிதம் என்பதோடு, அவசியமும் ஆகிறது. அதைப்பற்றி உரைக்கும்போது தெரிந்துவிடும் அது ஏன் இப்படியாக்கப்பட்டது என்பது.

மூன்று வேதங்களும் கால அளவால் மாறுபட்டவை; அதாவது வேறு வேறு காலத்தில் ஏற்பட்டவை. ஆகவே அவற்றிற்குள் பெரும்பான்மையான ஒருமைப்பாடு இருப்பது போலவே வித்தியாசங்களும் இருக்கின்றன. உள்ளுறையும், உரைக்கும் போக்கும், சொல் பொருள்களும் மாறுபடுகின்றன.

கி. மு. நூற்றாண்டுகள் நாலைந்துக்கு முன்னரே கிரேக்கர்களை அலக்ஷியம செய்யவும், விரட்டவும் முடிந்தது இந்தியாவில் இருந்த இந்த வைதீக ஜாதியால். அந்தக் காலத்திலேயே, வாழ்வும் அறிவும் பண்பட்டுப் போயிருந்தது அந்த ஜாதிக்கு. அன்று தொடர்ந்த அந்தப் பண்பாடு வெகுகாலமாய் நிலைத்தும் வந்தது.

பாரஸீக, கிரேக்க, ஸிதிய, மகம்மதிய, என்பன போன்ற பேரலைகளைத் தாங்கிப் பெயர் சொல்லிற்று அந்தப் பண்பாடு. அதன் வாழ்வும், அறிவுத் துறையும் ஆங்கிலேயர் வரும் வரைக்கும் கூட முறையே வளர்ந்துதான் வந்தது.

கி. பி. பத்தாவது நூற்றாண்டு முடிய இந்த பண்பாட்டின் வளர்ச்சியில் புதிய துறைகள் காணப்பட்டிருக்கின்றன.

பொதுவாக இந்த வேதங்களை ஆராய்வோருக்கு, இந்த இன மனிதர்களின் நாகரீக வளர்ச்சி, படிப்படியாய்த் தன் பச்சிளமைப் பருவம் வரைக்கும் சொல்லி மகிழ்விக்கிறது.

கிரேக்க இனத்தையும் விடச் சற்று வயதானது இந்த இனம். இதன் 'அன்றாட இலக்கியம்' தான் வேதம். இதில் விவரிக்கப்படும் அநுபவங்கள் — இளம் அநுபவங்கள், இயற்கையோடொன்றிய வாழ்க்கையழகுகள் வேறெங்கும் காண முடியாதன. தனது இயற்கையுறவால் ஏற்படும் அநுபவ விசேஷங்களை அடிப்படையாகக் கொண்ட, மத, தர்ம, முறைகளை, இந்த இனம் கூறும்போது அந்த இலக்கியத்தின் உயர்வு மிக அதிகமாகிறது. பிறகு நல்ல கட்டுக்கோப்பான, சட்ட திட்டங்கள் அமைந்த வாழ்க்கை, நிம்மதி, மனத்தின், தூய்மை, அங்கு நடமாடும் பிரதிபை நிறைந்த கற்பனையழகையுணர்ந்து அநுபவிப்பதால் அநுபவமும் கற்பனையும் கலந்து மகிழ்ச்சி துள்ளப்பாடுகின்ற பிறந்த மேனிப்பாட்டுகள்' வாழ்வை. பெரும் இன்ப மயமாக்கும் இயற்கையன்னையின் பரிசுகளையும், அவை செழிக்கக் கண்கண்ட காரணங்களாயிருக்கும் மழை போன்றவைகளையும், இருள் நீக்கி உயிரை இயக்கும் சூரியனையும், நிலைத்தில்லாவிடினும் தான் வரும்போது குளிமை பயந்து மகிழ்விக்கும் சந்திரனையும், வாழ்த்தாமல் இருக்க முடியுமா அவர்களால்?

கிழங்கும், கனியும், காயும் இலையும் சுவைத்து, புஷ்டி தருவனவற்றை மறுபடியும் தேடிச் சுவைத்து, இன்பமுறும்போது, ஏதாவது சொல்லி நன்றி தெரிவிக்க வேண்டாமா இவற்றைத் தந்த இயற்கைக்கு? இலையோடு இலையாய் கொடியோடு கொடியாய்ச் சுவைத்த பொழுது, சொக்கிவைத்து, சுருதி கூட்டுவதுபோல், மனத்தை இன்பத்தோடு கூட்டி இன்ப மூட்டும் பொருள்களை ஏத்திப் பாடவைத்த 'ஸோமத்தை'ப் புகழாமல் இருக்க முடியுமா? அதைச் செடி கொடிகளின் ராஜா வாக்கினால் அது முறைதானே?

சுகமான வாழ்க்கையில் கற்பனைக்குக் குறைவேது? பருவ மாறுதல்களையும், பகல் இரவுகளையும், அவற்றின் இடையீடுகளையும் அப்பொழுது தனக்கேற்படும் உணர்ச்சி விசேஷங்களையும் தொடர்ந்து உணர்ந்தால், உதிக்கின்றன கதைகள். உருவங்கள் வேண்டாவிடினும், பெயர்கள் வேண்டும். காணத்தக்க காரியங்கள் வேண்டும். தன் சக்திக்கு மீறித் தன்முன் நடக்கும் முறையான நிகழ்ச்சிகளில் பொருள் உதித்ததும், தேவதைகளும், கதைகளும் இடம் பெற்றன. அந்த 'பிறந்த மேனிப் பாட்டுகளில்' இவைதான் வேத இலக்கியப் பொருள்கள். இதன் சுயமான மேற்கூறிய வளர்ச்சிக்குப் பின்னடியே, இதனோடு தொடர்புள்ள மற்றொரு வகை இலக்கியமும் ஏற்பட்டது. அதனுள் முன்னதின் பொருள்களே விரிக்கப்பட்டன. அந்த விரிவில் சில புதுமைகள் இருந்தன. கற்பனையை திடப்படுத்தும் முயற்சி காணப்பட்டது. முன்னதற்கும் பின்னதற்கும் இடையில் வருஷங்கள் நூற்றுக் கணக்கில் திரையிட்டதால், ஓரளவுக்கு முன்னதில் இல்லாதனவும் பின்னதில் இடம் பெற்றன.

ஆகவே, வேத இலக்கியம் முழுவதையும் இரண்டாகக் கொண்டு, சில இயல்புகளைக் கொள்ள வேண்டும் நாம் தெளிவுக்காக.

ஒரு வகை: குறிப்பிட்ட கணக்கோடிருக்கும், இசை கலந்த பாட்டுக்கள். அவற்றிற்கு இயற்கையான பொருள் உண்டு. அந்தப் பொருளும் புஷ்டியான கருத்துள்ளது. அவற்றின் முக்கிய நோக்கம், தேவதைகளும், அவர்கள் கதைகளும்.

இரண்டாவது வகை: வசன உருவம் கொண்டவை. கொண்டு கூட்டி இடர்ப்பட்டுரைக்கும்

(7-ம் பக்கம் பார்க்க.)

# சிவாஜியின் அடிச்சுவடு

**கே. எஸ். ராமச்சந்திரன்.**

★

"சிவாஜியின் அடிச் சுவடு" என்ற புத்தாண்டின் புதிய சந்தேசத்தில் சமூகத்தின் தற்கால நிலைமை சமயத்திற்கேற்றவாறு நன்கு கையாளப்பட்டிருக்கிறது.

வசிட்டன் கட்சியும் விசுவாமித்ரன் கட்சியும் இன்றுமட்டுமல்ல நாளையுங்கூட இருக்கத்தான் செய்யும்.

இந்தியா வேண்டுவது மிருக பலமா ராணுவ பலமா என்பதை சிக்கறுத்து சீர்கட்டியது நன்றே. மிருக பலமட்டும் போதாது தனி ஆத்ம பலம் மட்டும் இகத்திற்கு இயைந்ததா என்பதுதான் வசிட்டன் காலமுதல் இன்றுவரையும், விஸ்வாமித்ரன் தண்ட நீதியினுல் வழக்குறைத்த காலத்திலிருந்து ஆதிபத்திய அகம்பாவத்தின் இன்று நாள்வரை, மறுபடியும் மறுபடியும் எழும் பிரச்னை.

இச்சிக்கலை அனுபவ வாயிலாக எடுத்துக்காட்டிய அரசன் சிவாஜி எனலாம். மஹாராஷ்ட்ரத்தை சிருஷ்டித்த வீரன் இவன். ஆத்மபலம் தோள்வலி இரண்டேயன்றி அரசியல் ஞானமும் பெற்றவன்.

இதுவரை நன்றாகத்தான் இருக்கிறது

ஆனால் கீழ் நாட்டு நாகரீகத்தை தாழ்த்துவது மிகவும் வருந்தத்தக்கதாயிருக்கிறது. செல்லரித்த சரித்திர எட்டை ஒருதரமாவதுபுரட்டவில்லையோ என ஐயமுறவேண்டியிருக்கிறது.

ஏதோ ஒரு அரசன் மூட பக்தியினுல் துளசியைத் தூவி தடைகட்டிவிட்டதாக நினைத்து சுதந்திர மிழந்தான் என்பதை பொது உதாரணமாக எடுத்து இந்திய நாகரீகத்தை இகழ்வது மிகையாகும்.

சமுத்ரகுப்தன், சந்திரகுப்த விக்ரமாதித்யன், ஹர்ஷன் முதலியோர் இந்திய அரசர்களல்லவா? ராணு பிரதாப் சிங் எத்தகையோன்? அத்தகையோர் பாரத தாய்க்குபிறக்கவில்லையா? பல்லவ அரசன் மாமல்லனை மறக்கமுடியுமா? தக்கசீல அரசன் போரஸ் வீரம் குன்றியவனு? அலக்ஸாண்டர் படையெடுப்பை துளசியை தூவியா தடுத்தான்? அசோகன் அஹிம்ஸா தத்துவத்தோடு நல்ல பயிற்சியுடைய நிரந்தரப் படை (Standing Army) ஒன்று வைத்திருக்க வில்லையா?

[illegible]க்கத்திய நாகரீகம் இகவாழ்வை [illegible]ந்ததா? இகவாழ்வை இகழ்ந்தால் பெரிய பட்டிணங்கள் எது? மாட மாளிகைகளும் கூட கோபுரங்களும் எது? அஜாக்தா, எல்லோரா சித்திரங்கள் எது? விஜயநகரத்தின் கடைத் தெருக்களில் நவமாணிக்கங்கள் கூறுகட்டி காய்கனிகள் போன்று விற்கப் பெற்ற அமைதி எது?

இச்சமயம் வலிவற்று இருப்பது போதுமென்ற மனத்தின் பிரதிபிம்பமல்ல. ஆத்மவிசாரத்தின் தளையுமல்ல. புலனடக்கத்தின் வீழ்ச்சியுமல்ல. உயிர்த் தியாகத்தின் அதிர்ச்சியுமல்ல. படையெடுப்பினுல் வந்த பலனுமல்ல. ஈஸ்வாத்தியானத்தால் வந்த உறக்கமுமல்ல.

இந்திய நாகரீகம் எவ்விதத்திலும் மேற்கத்திய நாகரீகத்திற்கு தாழ்ந்தது அல்ல. பாத்தையோடி இகத்தை நம் நாகரீகம் மறக்கவில்லை. தோள்வலியை துணையாகக்கொண்டு ஆத்ம பலத்தை [illegible]டையதாக இருந்தது என்பதற்கு செல்லரித்த எடும் சொல்லி நிற்கிறது. நாகரீகம் கிழக்கிலிருந்து மேற்கே பரவியது என்பதற்குச் சரித்திரம் அத்தாட்சி.

இன்று தோள்வலி குன்றி அடிமைத் தளைபூண்டு தம் மக்களின் உண்மை விவயைக் காண்பிக்கஇயலாமல்தவிக்கும் நம் பாரதத்தாயின் வயிற்றில் பிறந்த வீரர்கள், எத்தனையோ முப்பலமும் கொண்ட எத்தனை எத்தனையோ அரசர்கள் பிறந்தனர் என்பதை உலகமறியும். சரித்திரம் கூறும். கணக்கற்ற கல் வெட்டுகள், அழிந்த நகரங்கள், எழுந்த கோவில்கள், பரந்த தீவுகளில் பரவிய நம் நாகரீகம் எல்லாம் உரக்ககூவி நாமிருந்த வலியையும் இழந்த வலியையும் பறையறைகின்றன.

மன்னன் "சிவு"வை நாம் என்றும் மறக்கமுடியாது. அவர் அடிச்சுவட்டை இன்றுமட்டுமேயல்ல என்றும் பின் பற்ற வேண்டும் என்பது மறக்க முடியாத உண்மை.

இவ்வுலகத்தை நன்கு பயன்படுத்தியே அவ்வுலகத்தை அடைதல் இயலும். நம் இயல்பைப் பூரணமாக்கும் வழி அதை அழித்துவிடுவதன்று. அதற்கு அதிகமாக அதோடு சேர்ப்பதும், அதன் லட்சியத்திலும் உயர்ந்த லட்சியத்தை நாடச் செய்வதுமே.

—நியூமன்.

# மேற்கே இந்திய இலக்கியம்

ஸ்ரீ ரா.

உலகத்தில் எண்ணற்ற தேசங்கள், ராஜ்யங்கள் இருக்கின்றன. ஆனல் உலக மகாஜனங்கள் ஒரே வர்க்கத்தை, ஆதியைச்சேர்ந்தவர்கள் தான், அவர்களுக்குள் அதிகமான கலாசார ஒற்றுமைகள் தென்படுகின்றன என்ற உண்மைகளை அறிந்துகொள்ளும் போது நாம் சிந்தனைப்போக்கில் விசாலமடைகிறோம்.

சமீபத்தில் மேலே குறிப்பிட்டிருக்கும் தலைப்பின் சம்பந்தப்பட்ட அநேக விஷயங்களை, உண்மைகளை பி. பி. ஸி. ஒலிபரப்புகளிலிருந்தும், தாமஸ் காட்வின் அவர்களது புத்தகத்திலிருந்தும், ஜர்மானிய இலக்கிய சரித்திரத்தினின்றும், ஹோரஸ் போல்மன் அவர்களது கட்டுரையிலிருந்தும் தெரிந்துகொண்டேன். அவைகளைப் பின்வருமாறு சுருக்கமாகக் குறிப்பிடுகிறேன்.

அமெரிக்கர்கள் தங்களது கலாசாரம் இங்கிலாந்து, பழையகிரீஸ், ரோமாபுரி முதலிய தேசங்களினின்று வந்தது, தங்களது வாழ்க்கை அவர்களது வாழ்க்கையின் தொடர்ச்சிதான் என்றெல்லாம் நம்புகிறார்கள். இது ஓரளவு உண்மைதான். ஆனல் அவர்கள் இந்த மேற்கு தேசங்களுக்குப் பட்டிருக்கும் கடனை விட இந்தியா முதலிய கிழக்கு தேசங்களுக்குப்பட்டிருக்கும் கடன் மிகப் பெரியது.

கிழக்கு தேசங்களெல்லாவற்றிலும் இந்தியா மேற்கு நாடுகளைத் திகைக்க வைத்து ஆட்கொள்ளும்படியான கலாசார முக்கியத்துவம் பெற்று நிற்கிறது.

தலைமுறை தலைமுறையாக அமெரிக்கப் பள்ளிக்கூடக் குழந்தைகள் பிரபல பிரெஞ்சு ஆசிரியர் 'ஜீன்டிலா பான்டெயின்' அவர்களால் பிரசித்திபெற்ற "பெண்ணும் பாற்குடமும்" என்ற கதையைப் படித்து மகிழ்ந்திருக்கின்றன. அந்தப் பெண் தன் தலையில் சுமந்த விலையுயர்ந்த பாற்குடத்தை கீழே போட்டு உடைத்து விட்டாள் என்று கதை சொல்லுகிறது. இந்தக் கதை "பஞ்சதந்திரத்தின்" ஐந்தாவது புத்தகத்தில் காணப்படுகிறது என்பது இந்தக் குழந்தைகளொருவருக்கும் தெரியாது! அதிலே பிராம்மணன் ஒருவன் கனவு கண்டு கொண்டே சட்டியை உடைத்த கதை நமக்கெல்லாருக்கும் தெரியும்.

இது அமெரிக்கர்களால் விரும்பி ரசிக்கப்பட்ட நூற்றுக் கணக்கான கதைகளில் ஒன்றுதான். இவையெல்லாம் ஐரோப்பாவைத் தாண்டி அமெரிக்கர்களிடம் சென்றன.

கி. மு. ஆருவது நூற்றூண்டில் தோன்றிய "ஏசாப்பின் கட்டுக்கதைகள்" இந்தியாவிலிருந்து தான் கிளம்பின என்பதற்கு ஆதாரம் நிறைய இருக்கிறது. கி. மு. ஆருவது நூற்றூண்டில் பிரசித்தி பெற்ற பஞ்சதந்திரக் கதைகள் பஹ்லவி பாஷையில் மொழி பெயர்க்கப்பட்டன. இதிலிருந்து அராபியில் படியேற்றம் நடந்தது. அதனின்று ஐரோப்பாவுக்குக் கதைகள் சென்றன. ஜர்மன் பாஷையில் இக் கதைகள் 1483-ம் ஆண்டில் தோன்றின. இவை ஜர்மானிய இலக்கியத்தையே மிகவும் செல்வாக்கடையச் செய்தன. பிறகு டச்சு பாஷைக்குள் இக் கனவுகள் புகுந்தன. பிறகு டேனிஷ் அப்புறம் ஐஸ்லாந்தின் பாஷை......!!

ஸர் தாமஸ் நார்த் என்பவர் இத்தாலிய மொழி பெயர்ப்புகளிலிருந்து இக் கதைகளை எலிஸபெத் காலத்து இங்கிலாந்துக்குள் புகுத்தினர். 1678-ம் ஆண்டில் லா பான்டெயின் தன் கதைகளைப் பிரசுரித்தார். அவைகளை வித்யாபதி என்பவருக்கு சமர்ப்பித்தார்.

கதைகளைவிட அவைகளின் உள்ளடங்கியிருந்த எண்ணங்கள், தத்துவங்கள் முதலியவை மிக முக்கியமாகபரவின.

கடவுள் என்கிற ஒரே உண்மையைத் தேடிய ஹோமர், தேல்ஸ், பிதாகரஸ் முதலிய கி. மு. ஆரும் நூற்றூண்டு கிரேக்க மஹான்களுடைய எழுத்தோவியங்கள் வேதங்களினுலும், அவைகளில் நிரம்பியிருந்த தத்துவங்களாலும் அதிகமாகப் பெருமைப்பட்டிருந்தன. கிரேக்க இந்திய தத்துவ சாஸ்திரங்கள் இன்னும் எவ்வளவோ இடங்களில் சந்தித்திருக்கின்றன.

பைபிள் புத்தகம் புத்தரது வாழ்க்கைச் சித்திரங்களிலிருந்து வரும் அதிசய சம்பவங்களைப் போன்ற பல சம்பவங்களால் நிரம்பியிருக்கிறது.

இது மாதிரியான பல உண்மைகளை சுவாமி அசோகானந்தர் தமது புத்தகத்தில் வெளியிட்டிருப்பதைக்காணலாம்.

அமெரிக்காவிலே எமர்ஸன், தோரு, விட்மன் முதலியவர்களது சிந்தனைகளை உபநிஷதங்களும், பகவத் கீதையும் மிகவும் கவர்ந்து ஆட்கொண்டன. அவர்களுக்கு அவை மொழிபெயர்ப்புகளின் மூலம் நன்கு தெரியும்.

தோரு தன் நண்பரான எமர்ஸனைப் பற்றிக்குறிப்பிடுகையில், "சுத்தமானவால்டன் தண்ணீர் கங்கையின் புனிதமான நீருடன் கலந்திருக்கிறது" என்று குறிப்பிடுகிறார்.

கீதையிலும் கதா உபநிஷதத்திலும் வரும் பாடலொன்றின் மொழிபெயர்ப்பு எமர்ஸனது "பிரம்மம்" என்ற கவிதையில் வருகிறது.

"கொல்லுபவன் தான் கொல்லுவதாக நினைத்துக்கொண்டாலும், கொல்லப் படுபவன் தான் கொல்லப் படுவதாக எண்ணினும், இருவரும் என்னுடைய பல திறப்பட்ட தன்மையை அறிவில்லை" இதே பாடலை பிராங்க்லின் எட்கர்டன் நேரே மொழிபெயர்த்திருக்கிறார்.

அரபிக்கதைகளின் ஐரோப்பிய மொழிபெயர்ப்புகளும், சாஸர், பொக்காச்சியோ இவர்களது கதைகளும் இந்திய இலக்கியத்திலிருந்து எடுக்கப் பட்டவை தான்.

மகாகவி ஷேக்ஸ்பியர் ஸர் தாமஸ் நார்த் அவர்களிடமிருந்து பலகதைகளைக் கேட்டுக்கொண்டாராம்.

பழைய கால யாத்ரீகர்கள், காரவன் வியாபாரிகள் முதலியோர் ஐரோப்பாவுக்கும் பல கதைகளைச் சுமந்து சென்றூர்கள்.

இந்தியா தேச சம்பந்தமான முதல் ஆங்கில நாடகம் டிரைடன் அவர்களால் எழுதப்பட்டது. அதன் பெயர் "ஔரங்கஜீப்" (1675) மில்டன் இந்தியாவைப் பற்றிக் கோட்பாடுகளில் கூற அலுத்துக்கொண்டதே இல்லை!

தாமஸ் காட்வின் "கிழக்கே பார்" என்ற தமது புத்தகத்தின் மூன்ருவது அத்தியாயத்தில், "எனக்கு ஆயுள் தண்டனை கொடுங்கள். ஸெயிண்ட் ஹெலனுத் தீவுக்கு அனுப்புங்கள். ஆனல் தயவு செய்து இந்தியாவின் கனவுக் கதைகளை ஓராயிரமாவது எனக்கு முன்னே வைத்துவிடுங்கள்" என்று எழுதுகிறார். நம் மதிப்பு அவருக்குத் தெரிகிறது!

ஷில்லர் என்ற ஜர்மன் மகாகவி இறக்கும் தருவாயில் "நான் பல பானங்களை வாழ்க்கையில் குடித்தேன்; அவைகளை ஜீரணம் செய்தேன். ஆனல் கங்கை ஜலத்தைப் போன்று தெளிந்த வேதப் பாடலை ஸ்வீகரிக்க முடியவில்லை! அதற்கு இன்னும் ஒரு வாழ்க்கை" என்று கூறியதாக சொல்லப்படுகிறது.

இப்போது அமெரிக்காவிலேயே கிப்லிங், யீட்ஸ், எட்வின் ஆர்னுல்டு முதலிய பேராசிரியர்களால் ஆங்கில-இந்திய இலக்கியமொன்று தலை தூக்கியிருக்கிறது.

இந்த உண்மைகள் ஜி. டி. காரட், எல். எல். எஸ். ஓமரலி போன்றவர்களால் ஆராயப்பட்டு வந்திருக்கின்றன.

இந்தியாவும் சமீபத்தில் மேற்கேயிருந்து இலக்கியக்கார்வைகளை எடுத்திருக்கிறது. ஆனல் இப்போது புரட்சி திரும்பவும் ஏற்பட்டு விருத்தி உண்டாகி விட்டது.

இந்தியாவிலிருந்து வெளியே சென்ற அதே கதைகள் இந்த நூற்றூண்டில் இங்கே அதிகமாகத் திரும்பி வந்திருக்கின்றன. பல அமெரிக்க ஆசிரியர்களும் இந்திய பாஷைகளில் மொழிபெயர்க்கப் பட்டிருக்கிறார்கள்.

கட்டுரையை முடிக்கு முன்னர் அமெரிக்க காங்கிரஸ் வாசக சாலையின் தலைவரான ஹோரஸ் பால்மன் அவர்களது மொழிகளைக் குறிப்பிடுகிறேன். அவர் சொல்லுகிறார்,

"ஆங்கில இலக்கியத்தைப்பற்றி ஏதாவது குறிப்பிடவேண்டுமானல் இந்தியாவையும், அதன் இலக்கியத்தையும் பற்றி நன்ருக அறிய வேண்டும் என்பதை நான் மனப்பூர்வமாக உணருகிறேன்"

இதிலிருந்து ஒன்று புலனுகிறது இந்தியருக்கும், மேற்கத்தியர்களுக்கும் கலாசார ஐக்கியம் இருக்கிறது. அது பலமானது.

# சென்னை மாகாண எதிர்காலம்

## $136\frac{1}{2}$ கோடி ரூபாய் செலவாகும்



யுத்த பிற்கால சீரமைப்புக் கமிட்டியின் சிபாரிசுகளை ஆதாரமாகக் கொண்டு சென்னை சர்க்கார் 5 வருஷத் திட்டமொன்றை தயாரித்திருக்கிறார்கள்.

வருமான ரிசர்வ் நிதி, மத்திய சர்க்காரின் மான்யங்கள், ரூ. 30 கோடி வரை கடன் எழுப்புவது முதலியவை மூலம் கிடைக்கக்கூடிய $142\frac{1}{2}$ கோடி ரூபாயில் ரூ. $136\frac{1}{2}$ கோடியை இந்த திட்டங்களுக்காகச் செலவிடுவது சர்க்காரின் உத்தேசம்.

### விசேஷ திட்டங்கள்

திட்டம் மூன்று பாகங்கள் கொண்டது. விசேஷ அவசரத் திட்டங்களுக்கு முதலில் தரப்பட்டுள்ளது. இதன் நோக்கம் தொழிற்பயிற்சியுள்ள நிபுணர்களை தயாரிப்பதுதான்.

2. புதிய எஞ்சினீரிங் காலேஜிகள், ஒரு புதிய வைத்திய காலேஜ், மற்றொரு விவசாய காலேஜ் தொழிற்கல்லூரிகள் நிறுவப்படும். கோவையில் மறுபடியும் காட்டுக் காலேஜ் ஏற்பாடாகும். சென்னை கால்நடை காலேஜ் விரிவாக்கப்படும். ஆனால் இவற்றில் பயிற்சி பெறுவோர் 5 வருஷங்களுக்கு முன் பயன்படமாட்டார்கள். திட்டவேலைகளுக்கு துரிதப் பயிற்சியின் மூலமாகவும் போர்முனையிலிருந்து வரும் தொழில் அனுபவஸ்தர்களையும் எடுத்துக்கொள்வார்கள்.

### போர்முனையிலிருந்து வருவோருக்கு குடியேற்றங்கள்

மாஜி சோல்ஜர்களுக்கென இரண்டு பிரத்தியேக திட்டங்கள் உண்டு. கூட்டுறவு முறையில் 50 விவசாய குடியேற்றங்கள் (9000 பேருக்கு) அமைக்கப்படும் ஜில்லாக்களில் 10 கூட்டுறவு ஒர்க் ஷாப்புகளை நிறுவி, அன்றாட உபயோகச் சாமான்களைச் செய்வதில் 3000 பேர் அமர்த்தப்படுவர். இவ்விரு திட்டங்கள் சம்பந்தமாக பூர்வாங்க வேலை ஏற்கனவே நடந்துவருகிறது. இவ்வ தவிர ...ங்கள் பல்வேறு வேலைத்திட்டங்களில் ... வீரர்களை சென்னை சர்க்கார் அமைத்துக்கொள்வர்.

### கால்நடை வசதி

இரண்டாவது திட்டப்படி விவசாயம், காடுகள், கால்நடைகள், மீன் பிடித்தல் முதலிய அபிவிருத்தி செய்யப்படும். சம்பந்தப்பட்ட இலாகாக்கள் வெகுதூரம் விரிவாக்கப்படும். நல்ல வித்து சப்ளை உர சப்ளை, பிரசாரம் முதலியன நடக்கும். 2 லக்ஷம் ஏகர் நிலத்துக்கு வருஷா வருஷம் உரமிட்டால் ஆண்டு தோறும் 10,000 டன் தான்யம் அதிகமாய் விளையுமென எதிர்பார்க்கபடுகிறது.

### கால்நடைப் பண்ணைகள்

பிரதான இடங்களில் கால்நடைப் பண்ணைகளை சர்க்கார் நடத்துவர்.

8 வருஷங்களில் ஒங்கோல், காங்கயம், ஹலிகார், ரக காளைகள் ஒரு லக்ஷமும், பசுக்கள் ஒரு லக்ஷமும் உற்பத்தி செய்யப்படும். ஒவ்வொரு ஜில்லாவிலும் 50 பசுக்கள், போதிய பொலிகாளைகள், ஆடுகள்கொண்ட கால்நடைப் பண்ணைகள் இருக்கும். கால்நடை வைத்திய உதவியும் ஆராய்ச்சியும் அதிகமாகும்.

### காடு விஸ்தரிப்பு

இரண்டு புது டிவிஷன்களை ஏற்பாடு செய்து காடுகள் விஸ்தரிக்கப்படும். கிராமாந்தரங்களில் காடு வளர்க்க வழி செய்வார்கள். சவுக்கு, தேக்கு சாகுபடிக்கு ஊக்கமளிக்கப்படும். மண்ணரிப்பைச் சமாளிக்கவும், நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்கவும் வழி செய்யப்படும்.

மீன் நல்ல உரமாதலால் அது ஏராளமாய் கிடைக்க வழி செய்யப்ப்டும்.

### 7 பெரிய நீர்ப்பாசன திட்டங்கள்

45—46 முதல் ஆரம்பமாகும் 5 வருஷங்களில் துங்கபத்திரா, கீழ் பவானி, கண்டி, கோட்டா, வைகை, வட பெண்ணை, மாலம்புழை, போலாவரம் என்ற பெரிய நீர்ப்பாசன திட்டங்களும் மேற்கொள்ளப்படும். போலாவரம் திட்டத்துக்கு ரூ. 50 கோடி செலவாகும். கட்டி முடிக்க 15 வருஷமாகும். முதல் 5 வருஷத்தில் நீர்ப்பாசன் வேலைகளுக்காக ரூ. $27\frac{1}{2}$ கோடி செலவழிக்கப்படும்.

துங்கபத்திரா திட்டத்தில் கிடைக்கும் மின்சார வசதியால் ராயலசீமாவில் தொழில்கள் தோன்றும்.

மின்சார விசை மலிவாகக் கிடைப்பதையே மாகாணத்தின் தொழிலபிவிருத்தி பொறுத்திருக்கும். அதற்கு வழி செய்யப்படும்.

### ரோட் போக்கு வரத்து

சர்க்காரே ரோட் போக்குவரத்துக்கு சொந்தக்காரர்களாயிருந்து நடத்தவேண்டும் என்பது கமிட்டியின் சிபார்சு. உற்பத்தி சப்ளையையும் சர்க்காரே மேற்கொண்டு இதைப்பற்றி மத்திய சர்க்காரைக் கலந்தாலோசிக்கவேண்டியிருப்பதால் திட்டமான முடிவு ஏற்படவில்லை.

15 வருஷ ரோட் திட்டமொன்று தயாரிக்கப்பட்டுள்ளது. 20,000 மைல் புது ரோட் அமைக்கப்படும். 1000 பாலங்கள் கட்டப்படும். மொத்த செலவு ரூ. 75 கோடி. இதில் 27·77 கோடி முதல் ஐந்து வருஷங்களில் செலவாகும். இதில் 7 கோடி டிரங்க் ரோடுகளுக்காக செலவழிக்கப்படும்.

ரோட் இலாகா ஒன்று ஏற்பாடாகும். எஞ்சினீரிங் காலேஜில் வருஷம் 100 பேர் வீதம் நிபுணர்கள் தயாரிக்கப்படுவார்கள். கட்டைவண்டிக்காரர்களுக்கு ரப்பர் கட்டு போடுவதற்கு வேண்டிய லகுவான கடன் வசதி தரப்படும்.

### கால்வாய்கள

கால்வாய்களின் சீர்திருத்தத்துக்கும் ரிபேருக்கும் ரூ. 53·65 லக்ஷம் செலவழிக்கப்படும்.

சிறு துறைமுகங்கள் செப்பனிடப்பட்டு விருத்திசெய்யப்படும்.

ராமேசுவரத் தீவு வழியாக அகலமான கப்பல் போகக்கூடியவாறு வேலை நடக்கும்.

### கல்வி

8வது வகுப்புவரை சிறுவர் சிறுமியருக்கு கட்டாய இலவசக் கல்வி தருவது சர்க்காரின் இறுதித் திட்டம். ஏற்கெனவே 30 லக்ஷம் குழந்தைகள் பள்ளிக்குப் போகின்றன. முதல் 5 வருஷங்களில் எண்ணிக்கை 13 லக்ஷம் அதிகமாகும். கட்டிட வேலைகளுக்கு அதிகப் பணம் செலவழிக்கும் உத்தேசம் சர்க்காருக்கில்லை. ஆரம்பப் பள்ளிக் குழந்தைகளுக்கு இலவச மத்தியான சாப்பாடு தரப்படும். மத்திய ஆலோசனை போர்ட் சிபார்சுசெய்துள்ள குறைந்தபட்ச சம்பளம் எல்லா உபாத்தியாயர்களுக்கும் கிடைக்கும்படி செய்ய ரூ. 9 கோடி செலவழிக்கப்படும்.

### சுகாதாரம்

10,000 பேருக்கு ஒரு சுகாதார சென்டர் வீதம் ஏற்பாடு செய்ய உத்தேசிக்கப்படுகிறது. ஒவ்வொரு தாலூகா தலைநகரிலும் 50 முதல் 100 வரை படுக்கை வசதியுள்ள ஆஸ்பத்திரிகள் இருக்கும். 1,487 புது வைத்திய ஸ்தலங்களும் 177 தாலூகா ஆஸ்பத்திரிகளும் அமைக்கப்படும்.

வால்டேரில் ஒரு க்ஷயரோக ஆஸ்பத்திரி நிறுவப்படும். குஷ்டரோக நிவாரணத்துக்குப் பெருமுயற்சி செய்யப்படும்.

### ஜல சப்ளை

10 வருஷங்களில் எல்லா கிராமங்களுக்கும் பாதுகாப்புடன் கூடிய ஜல சப்ளை ஏற்பாடாகும். 1938ல் தயாரிக்கப்பட்ட திட்ட வேலையில் பாதி ரூ. $2\frac{1}{2}$ கோடி செலவில் முதல் 5 வருஷங்களில் நடத்திவைக்கப்படும்.

82 முனிசிபாலிடிகளுக்கும் 167 சிறிய நகரங்களுக்கும் 20 வருஷ திட்டப்படி ஜல சப்ளை பூர்த்தியாகும். முதல் 5 வருஷங்களில் ரூ. 3·75 கோடி செலவழிக்கப்படும்.

### கிராம முன்னேற்றம்

கிராம முன்னேற்றத்துக்கு விரிவான திட்டமொன்று தயாரிக்கப்பட்டிருக்கிறது. அதன் பரிசீலனை இன்னும் முடியவில்லை.

### 5 வருஷத் திட்ட செலவு விவரம்

5 வருஷத் திட்ட விவரம் வருமாறு:-

| இனம். | ஆயிரம் ரூபாய்களில். |
|---|---|
| மாஜி வீரர்களுக்கு வசதிகள் | 239,93 |
| தொழில்கள், பயிற்சி | 244,35 |
| ரோடுகள் | 2,778,65 |
| மின்சாரத் திட்டம் | 1,110.36 |
| நீர்ப்பாசனம் | 2,755,89 |
| கால்வாய்கள் | 53,65 |
| துறைமுகங்கள் | 342,77 |
| விவசாயம் | 801,05 |
| கால்நடை | 166,87 |
| காடுகள் | 161,70 |
| மீன் | 92,55 |
| கிராம அபிவிருத்தி | 37,49 |
| கல்வி | 3,067,00 |
| சுகாதாரம் | 479,48 |
| ஜல சப்ளை, சாக்கடை | 3,74,67 |
| வைத்தியம் | 554,04 |
| வீட்டு வசதி | 3,25 |
| கடன் வகைச் செலவு | 377,60 |
| மொத்தம் | ரூ. 13,641,30 |




அறவலி காத்து நாளும் அன்னையின் பணிக்கென்றே நம்
உறையிலே உறங்கும் வீரம் உருவினேம் ஓங்கிவிட்டோம்.

திருச்சி. பார்த்திப-வூ சித்திரை-மீ 17-உ. 29—4—45

# பொன் வாசல்



மிக அழகான பெயர். நாடக மண்டபம் ஒன்று இப் பெயரைத் தாங்கி "டால்" வீசுகிறது. ஸான் பிரான்ஸிஸ்கோ நகரத்தில் "கோல்டன் கேட்" என்ற இந்த அற்புதமான மணி மண்டபத்தில் தான், உலகப் பந்தோபஸ்து மகாநாடு ஆரம்பமாகியிருக்கிறது.

25-ந் தேதி மாலை 5 மணிக்கு அந்தி மயங்கும் வேளையில், அமெரிக்கப் புதிய ஜனாதிபதி ட்ரூமன் வாஷிங்டனிலிருந்து ரேடியோ மூலம் வரவேற்புக் கூற அவருடைய அரசாங்கக் காரியதரிசி ஸ்ரீ ஸ்டெட்டினியஸின் ஆரம்ப விழா நிகழ்த்த 46 தேசத்து அரசியல் பிரதிநிதிகளும் அவையில் அமர்ந்திருக்க மகாநாடு ஆரம்பமாகிவிட்டது. அடர்ந்து ஆறு வாரங்கள் வரை அம் மகாநாட்டில் அரும் பெரும் பிரச்னைகள் பல அலசிப்பார்த்து அறுதியிடப்படுமென்றும் அறிவிக்கப்படுகிறது.

ஆனந்த பூரிதராக அங்கு பலர் அமர்ந்திருக்க, அதிருப்தி அடைந்திருப்பவர்களும் உண்டு.

பிரதிநிதித்வம் பெருத இதாலிய சர்க்காரும் மக்களும் 46 நேச நாடுகளுக்கும் தங்களுடைய அதிருப்தியை அறிவித்துள்ளனராம் ஆக்ரமிப்பு தேசங்களின் மீது நடவடிக்கை எடுப்பது சம்பந்தமாக ஐந்து வல்லரசுகள் பெற விருக்கும் அதிகாரத்தை, ஆஸ்திரேலிய சர்க்கார் எதிர்ப்பதாக, அயல் நாட்டு மந்திரி ஈவாட் அறிவித்திருக்கிறாராம்.

பிரிஸ்கோ மகாநாட்டில் இந்தியாவுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் அந்தஸ்து பற்றி இந்தியாவின் மனப்பான்மையும் தெளிவாகத் தெரிந்ததுதான். இது சம்பந்தமாக காமன்ஸ் சபையில் தொழிற் கட்சி அங்கத்தினர் சோரன்ஸன் ஒரு கேள்வி கேட்பாரென்றும் தெரிகிறது.

மகாநாட்டில், உலகப் பாதுகாப்புக் கவுன்சிலில், இந்தியாவுக்கு ஒரு ஸ்தானம் நிரந்தரமானதாக இருக்கவேண்டுமென்பது பற்றி "இந்தியப் பிரதிநிதிகள்" வற்புறுத்தப் போகிறார்களாம். அப்படி அது அவ்வளவு அசாத்யமான காரியமாகப் போய்விட்டால், ஓட் கொடுக்கும் உரிமை இல்லாவிட்டாலும் விவாதத்தில் கலந்து கொள்ளும் உரிமையுடன் ஏழு இந்தியர்களுக்கு இடம் தர வேண்டுமென்று குறைந்த பக்ஷ கோரிக்கை சமர்ப்பிப்பார்களாம்.

மகாநாடு ஆரம்பிக்கு முன்பு, பிரிட்டிஷ் பிரதிநிதிகளின் பொதுவான கொள்கையை விளக்கி மேஜர் அட்லி அறிவித்திருப்பதாவது:-

"நமது பொருளாதாரக் கொள்கை தான் உலகத்தில் நாஜிக் கொள்கையையும் பாஸிஸத்தையும் தோற்றுவித்துள்ளன. ஆகவே யுத்தத்தைத் தவிர்க்க ஏற்பாடு செய்வதைவிடப் பொருளாதார அமைப்பில் சீர்திருத்தம் செய்ய வேண்டியது மிகவும் முக்கியம்."

மகாநாட்டின் காரியத் திட்டம் பற்றி, பிரிட்டிஷ், அமெரிக்க ரஷ்ய, சீனப் பிரதிநிதிகள் கலந்து பேசியிருக்கிறார்கள்.

ஜனாபதி ட்ரூமன் தன்னுடைய செய்தியில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

"தனிப்பட்ட நபரின் சுயநலனை மறந்து அகில உலகத்தின் மனிதவர்க்கத்தின் க்ஷேமத்தை நிரந்தரமாக ஸ்தாபிக்கத்தக்க ஆலோசனைகளைச் செய்யுங்கள். மனிதன் தனித்து வாழ முடியாதென்ற உண்மையை நாம் வெகுகாலத்துக்கு முன்பே உணர்ந்துவிட்டோம். இந்த அடிப்படையான கொள்கையில் எல்லோருக்கும் கவனம் இருக்கவேண்டும்"

"உலக சமாதானத்துக்கு ஓயாது கனவு கண்டு கொண்டிருந்த ஜனாதிபதி ரூஸ்வெல்டின் பரந்த திருஷ்டியும், உறுதியுமே இந்த மகாநாட்டின் ஆரம்பத்துக் காரணம். உலகத்தில் மீண்டும் யுத்தம் ஆரம்பமாகாத நிலைக்கு ஏற்பாடுகள் செய்ய வேண்டும்."

உலக சரித்திரத்திலேயே மிகப் பெரிய அவளவில் திட்டமிடக் கூடும் முதல் மகாநாடு இது. "கோல்டன் கேட்" நாடக மண்டபத்தில் கூடியிருக்கும் உலக பந்தோபஸ்து மகாநாட்டின் ஆரம்பக் காட்சிகள் இவை.

சான்பிரான்சிஸ்கோ மகாநாடு புதிய உலகத்தின், பொன் வாசலாக அமையுமா? அல்லது வல்லரசுகள் சுயநலத்தைக் காத்துக் கொள்ளும் குள்ள நரித் திட்டங்களை ஸ்திரப்படுத்திக் கொண்டு இந்தியா போன்ற நாடுகளை நிரந்த அடிமைத் தனத்தில் வைத்திருக்கப் பேராசை கொள்வதன் மூலம், "நரக வாசலாக"த்தான் உருவெடுக்குமா என்பதைப்பற்றி நாம் சொல்லவேண்டாம். மகாநாடு நடைபெறுகிறது. நிகழ்ச்சிகளைப் பொறுமையுடன் கவனிப்போம்.




## பெர்லின் பூராவாக வளைக்கப்பட்டது

பெர்லினை செஞ்சேனை வளைத்துக்கொண்டுவிட்டதாக மார்ஷல் ஸ்டாலின் அறிவிக்கிறார்.

போடஸ்டாமுக்கு வடமேற்கே கோனீவ்ஜுகாவ் படைகள் சந்தித்துப் பெர்லினைப் பூராவாக வளைத்துவிட்டன.

ஹிட்லா இன்னும் பெர்லினில் தான் இருக்கிறார் என்றும் தற்கொலைப்படை உதவியுடன் தெருக்களிலும் பாதாள ரயில்வேக்களிலும் போரை நடத்திவருகிறாரென்றும் செய்திகள் கூறுகின்றன.

பாதாள ரயில்வேக்களில் ரஷ்யப் புயற்படைகள் போரிடுகின்றன. இந்த ரயில்வேக்கள் வழியாகத் தான் தங்கள் ரிசர்வ்களை ஜெர்மானியர் இடம்பெயர்த்துப் போரிட முடிகிறது. ஆகையால் அவைமீது ரஷ்யர் கவனம் செலுத்துகின்றனர். 60 நிமிஷ நேரம் உக்கிரமாகப் போரிட்டு இழந்த ஒரு ஸ்டேஷனை ரஷ்யர் மீட்டனர். ரஷ்ய பீரங்கிகளும் தரை மட்டத்துக்கு அடியில் நடக்கும் போரில் ஈடுபட்டுள்ளனர். ஏராளமான சோவியத் டாங்குகளும், பீரங்கிகளும் பெர்லினுக்குள் புகுந்தவண்ணம் இருக்கின்றன.

பெர்லினில் ஒவ்வொரு அடி மண்ணுக்கும் கடும்போர் நடப்பதாகவும் அது அறிவித்தது.

பெர்லினில் பிடிபட்ட பகுதிகளில் போக்குவரத்தை ஒழுங்குபடுத்தும் வேலையை ரஷ்யப்பெண்கள் ஏற்றுக்கொண்டிருக்கின்றனர்.

பெர்லின் காஸ் தொழிற்சாலை, பாராசூட் தொழிற்சாலை, விமான எஞ்சின் தொழிற்சாலை முதலியன ரஷ்யர்வசமாய்விட்டன.

13, 15 வயதுப் பையன்களைக் கூட ஜெர்மானியர் போரில் ஈடுபடுத்துகிறார்கள்.

சிலவிடங்களில் நாஜி அதிகாரிகளுக்குக் கைகலப்புக்கூட இருந்ததென்று கூறப்படுகிறது.

நாஜி பிரமுகர்கள் விமான மார்க்கமாய் பர்லினிலிருந்து வெளியேறிக் கொண்டிருக்கின்றனர்.

## போரை நிறுத்துக!

சென்ற வாரம் சிறைப்பட்ட பிரிகேடியர் ஜெனரல் ஹீன்ரிச் கிரஸ்தீம் இப்போது ஜெர்மன் சேனாதிபதி பீல்ட் மார்ஷல் கெய்டலுக்குக் கீழ்க்கண்ட வேண்டுகோளை லக்ஸெம்பர்க் ரேடியோ மூலம் விடுத்தார்:

"யுத்தத்தில் தோற்றுவிட்டோம். மேற்கொண்டு போரை நீடிக்கலாகாது. ஹிட்லருக்கு நீங்கள் தான் முதன்மையான ராணுவ ஆலோசகர். நமது இளைஞர்களின் அர்த்தமற்ற படுகொலையையும் எஞ்சியுள்ள நமது நகரங்களின் நாசத்தையும் நீங்கள் தான் தடுக்கவேண்டும். நம்மிடம் ரிசர்வ்கள் இல்லை; புது ஆயுதங்களில்லை. பொதுஜனப் படையால் பயனில்லை. ஹிட்லருக்கு நியாயம் சொல்லி இந்தப் போரை நிறுத்தவேண்டும்.

"நாஜி ஆட்சி கவிழ்ந்தால் ஜெர்மன் மக்கள் அழிந்தாகவேண்டும் என்பதில்லை. தோல்வியை ஒப்புக்கொண்டு விதிக்குத் தலைவணங்குவதுதான் பெருந்தன்மை."

# உயர்வு

வ. — க.

கீழ் வானம் வெளுத்தது. சிவப் பேறியது, நாணம் படர்ந்த கன்னியின் கன்றிச் சிவந்த கன்ன மென.

உலகில் விழிப்பு தலை தூக்கியது.

வானிலே செங்கதிரோன் மணி முடி உயர்த்தினன். மண்ணுலகில் உயிர்க்குல மலர்ச்சி.

மலர்களும் தலை நிமிர்ந்தன. கண் விழித்தன. இதழ் அகற்றி முழு நகை புரிந்து மணம் பெற்றன. நுண்ணலை சல சலக்கும் தடாகத் தில் மலர்க் கூட்டம். தாமரை மலர்கள்.

கதிரவனின் பொன் கதிர்கள் படவும், கட்டவிழ்ந்து, மலர் முகம் நிமிர்த்தின மலர்கள் காதலன் வரக் கண்டு சிவக்கும் மங்கையர்போல்.

ஒரு மலர், ஞாயிற்றின் கரம் தீண்டி மகிழ்வு பெற்றதால் பெரு மிதம் கொண்டு சிரித்தது:

'ஞாயிற்றின் செல்விகள் நாங்கள். அன்னவனின் அன்பு எங்கள் பால். இரவு பட்டதும், கீழ் வானில் எட்டி நகைக்கும் கதிரவன் முதலில் தொட்டு முத்திடுவது எங்களை நாங் கள் சிறந்தவர்'

இராக்கால வான் வெளியில் மின்னுகிற வெள்ளிகள் போல், குளமெங்கும் சிதறிக் கிடந்த மலர் கள் தலையாட்டி மகிழ்ந்தன.

கேட்டிருந்த சூரியகாந்தி மோன மூச்செறிந்தது: 'பவிஷு இராதா பவிஷு!...... அவள் உயர்வாம்! என்ன தவம் செய்துவிட்டாள்! மேனு மினுக்கி........ கதிரவன் மறையும்போது கவலையுறுபவள் போல தலை தாழ்த்தி வாடும் வேஷம் போடும் பாசாங்குக்காரி... இரவெல்லாம் என் அன்பன் வரவுக் காக ஏங்கி விழித்து நிற்கிறேன். காலையில் கதிரவன் முகம் காட்டும் பளிங்குபோலக் காட்சி யளிக் கிறேன், கீழ்திசை திரும்பி பின் பகலவனையே வைத்த விழி வாங்கா மல் பார்த்து நிற்பேன். மாலை யிலே அவனை வழியனுப்பி, பின் னர் கீழ்திசையில் விழி வைத்து... அப்மா, தூக்கமுண்டா சோர் வுண்டா!...... நானே சிறந்தவள்!

முன்னவளின் பேச்சையும், பின் னவளின் முண முணப்பையும் செவியேற்றுச் செல்லும் தென்றல் சிரித்தது. அது உணர்ந்தது......

ஒரு செடி, காலையில் கிழக்கு நோக்கி தவம் செய்கிறது. இலை களும் துளிர்களும் அத்தனையும் கிழக்குப் பக்கம் பார்த்து ஆவலு டன் துடிக்கின்றன.

ஞாயிறு வருகிறது. எழுகிறது. தவழ்கிறது வான வீதியிலே. மேலே.........மேலே......... வான் முகட்டை எட்டிவிடுகிறது.

செடி நிமிர்கிறது. செடியின் இலை, துளிர் எல்லாம் உயர்கின் றன, சூரியனின் போக்கையே கவ னிக்கும் விழிகள் என.

நேரமாகிறது. பகலவன் விரை கிறான் மேல் திசை நோக்கி. மேல் வானில் இறங்குகிறான். கீழே போய், கீழ் விழுந்து, தொடுவா னின் கீழேயே பதுங்கிவிடுகிறான்.

அந்தச் செடியின் இலைகள், தளிர் கள் எல்லாம் மேல் திசை நோக் கித் திரும்புகின்றன. மாலையாக ஆக, இரவு வரவர, செடியின் இலை கள் கவிந்து விடுகின்றன, செடி சோகத் தோற்றம் உற்றது போல.

மறுநாள் காலை, செடி கிழக்குப் பக்கம் பார்த்து நிற்கிறது. ஞாயிறு வருகிறது. மீண்டும் அதே கதை.

இந்த நாடகம் எத்தனை காலமாக நடந்து வருகிறது? அதனால் செடி என்ன இன்பம் கண்டது?

யாருக்குத்தெரியும்! உலகம் அறி யாத உண்மை. பாவம் புளிச்சைச் செடி! உலகம் பகட்டையும் ஆடம் பரத்தையுமே கவனிக்கிறது. விளம் பரமும் வேஷமும் மதிப்பு பெற்று விடுகின்றன. காவியமும், கலையும் அவர்களின் புகழ் புராணமாகக் கூட மாறிவிடுகின்றன... உண்மை யான உழைப்பு கௌரவிக்கப் படு கிறதா? சரியானபடி கவனிக்கப்படு வது கூட இல்லையே!... பாவம் புளிச்சை! அப்பாவி!' என இரங்கி யது இளங்காற்று.

என்றாலும், புளிச்சைச் செடி தனது போக்கிலேயே வாழ்கிறது, காலையில் கீழ்திசையில் விழிவைத்து பின் பகலவனின் உடன் பார்வை போக்கி; மாலையில் தலை கவிழ்ந்து. தாமரையின் பெருமையும், சூரிய காந்தியின் சிறப்பும் அதற்கு இல்லை ஆயினும் தனது முயற்சியில் களிப் புற்று வளர்கிறது அது. தனது உழைப்பிலே இன்பம் காண்கிற கலைஞனைப் போல.

(2ம் - பக்கத் தொடர்ச்சி.)

## வேதங்கள்

பொருள்; அதுவும் மிகக் குறுகிய அளவுடைய பொருள். புதிய சில கர்மங்களும் (யாகம் முதலியன) அவற்றிற்கு முறையுரைப்பதும் தான் இதன் நோக்கம்.

இந்த இரண்டாவது வகை இலக் கியத்தில்தான் 'ருக், யஜுஸ், ஸாம' என்ற மூன்றும், நிர்ணய மான உருவத்தை அடைந்து தனித் தனியே வழக்கம் பெறுகின்றன. இதில் தான், யாகங்கள் பெரிய அஸ்திவாரங்களுடன் விரிவடை கின்றன. இதில் புதிய 'இலக்கியம் தோன்றியதே குறைவு. இல்லை யென்றே சொல்லிவிடலாம். ஆனால் முன்னதின் இலக்கியத்தையே, கையாண்டு பெருக்கி, விளக்கி, மேற்கோள் கொடுத்து, அவை போலச் சிலவற்றை ஆக்கி வளர்ந் தது இது.

## திருவனந்தபுரத்தில் "தசாவதாரம்"

அன்னதானத்திற்கு ரூ. 21000



திருவனந்தபுரம் சித்ரா தியேட்டரில் தற்சமயம் நாடகங்கள் நடத்திவரும் நாடகக் கலையரசு, நாடகக் கலாநிதி, நாடகக் கேசரி, நவாப் டி. எஸ். ராஜ மாணிக்கதின் மதுரை தேவி பால விநோத சங்கீத சபையார் சென்ற 13—4—45 வெள்ளிக்கிழமையன்று திருவாங்கூர் திவான் சசிவோத்தம சர். சி. பி. ராமஸ்வாமி அய்யரவர்கள் முன் னிலையில் "தசாவதாரம்" என்ற புதிய நாடகத்தை முதன்முதலாக நடத்தி னார்கள்.

திவான் ஸர் சி. பி. ராமஸ்வாமி அய்ய ரவர்கள் நாடக முடிவில் நவாப் டி. எஸ். ராஜமாணிக்கம் பெரும் பொருட் செல வில் மிக சிரமத்துடனும், கலானுட்பத் துடனும், மிக மேன்மையாக "தசாவ தார"த்தைத் தயாரித்துள்ளதைப்பற்றிப் பாராட்டிப் பேசினார்.

அன்றைய வசூல் தொகை ரூ, 21,190-ம் திருவனந்தபுரம் வஞ்சி அன்னதான நிதிக்குக்கொடுக்கப்பட்டது. ஷை அன்னதான பவனத்தில் ஏராளமான ஏழை மக்களுக்கு, நவாப் டி. எஸ். ராஜ மாணிக்கத்தால் அன்னதானமும் செய் விக்கப்பட்டது. இவ்வளவு பெரிய தொகையை 2-வது தடவையாக ஸ்ரீ நவாப் அவர்கள் ஷை நிதிக்குக் கொடுத் திருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

வாழ்க்கை முரண்—2

# விமர்சகப் பெரியார்

ஆர். கே. பார்த்தஸாரதி, எம். ஏ. எல். டி.

அவர் விமர்சகர் கோஷ்டியில் தலை சிறந்தவர். விஷயங்களை அக்கு வேறு ஆணி வேறாகக் கழற்றி விமர்சனப் பூதக்கண்ணாடியில் பார்த்து, அவ்விதம் பார்த்ததைப் பத்திரிகைகளின் பத்திகளில் பிரசுரிப்பது அவர் தொழில். இல்லை—கலை—அல்லது கலையின் மூச்சு! உயிரின் மூச்சைப்போல. உலகத்தில் உள்ள ஒவ்வொரு வஸ்துவையும் விமர்சிக்கும் ஆற்றல் அவருக்கு இருப்பினும், அதை புத்தகங்களுக்குமட்டுமே உபயோகித்துவந்தார். நல்லகாலமாக மற்ற விஷயங்கள் பிழைத்தன என்று "விஷயம் தெரியாத" சிலர் கூறுவதுண்டு. இந்த உண்மையை ஏற்பது எனக்கும் அவருக்குமிடையே நிலவிவந்த நட்பிற்கு ஏற்றதல்ல. 'அது உண்மைதானா?' என்று என்னுடைய விமர்சக நண்பரும் இதுவரை விமர்சிக்கவில்லை. அப்படியிருக்கும்பொழுது நான் ஏன் இதைப் பற்றி அதிகம் எழுதவேண்டும்?

சூரியன் கிழக்கே உதிக்கத் தவறினாலும் நான் அவர் வீட்டிற்குச் செல்லத் தவறுவதில்லை. நாள்தோறும் பத்திரிகைகளில் பிரசுரமாகும் அவருடைய விமர்சனங்களைப் பார்ப்பதற்காக நான் செல்வதில்லை. ஆனால் அவருடைய விமர்சனங்களைத் தவிர்த்து மற்ற எல்லாச் செய்திகளையும் படிப்பதற்காகத் தான் நான் அங்கு செல்வேன். பாவம்! அவர் அதை அறியவில்லைபோலும். இல்லாவிட்டால் இந்த இரண்டு வருட காலமாக நான் அவருடைய நன்மதிப்பில் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றெட்டுப் பத்திரிகைகளை இலவசமாகப் படித்துவருவது ஸாத்யமா?

அன்றும் வழக்கம்போல் அவர் வீட்டிற்குப் போயிருந்தேன். இன்னும் ஒரு பத்திரிகையும் வரவில்லை. சிறிது நேரம் சென்றபின் வரலாமென எண்ணி வீட்டிற்குக் கிளம்ப எழுந்திருந்தேன். அப்பொழுது அவர் என்னை நிறுத்தினார். அவருடைய வழக்கமான குரலில்—அன்பார்ந்த குரலில்—இன்று சோகமும் ஆத்திரமும் கலந்திருந்தன. அவர் பேச ஆரம்பித்தார்.

"பார்த்தீர்களா ஸார் இந்த அக்ரமத்தை?"

திடீரெனக் கேட்டால் நான் என்ன பதில் சொல்வது? பேசாமலிருந்தேன். அவருடைய படபடப்பு அதிகமாகியது. இப்பொழுது அதே வாக்கியத்தை வேறொரு வகையில் அமைத்து வெளியிட்டார்.

"என்ன அயோக்யத்தனம் பண்ணியிருக்கான் ஸார்?"

இனியும் பேசாமலிருந்தால் 'ஓசிப் படிப்பு'க்கு ஆபத்து வந்துவிடுமென்று ஓர் எண்ணம் அநுபவ வெளியில் பளிச்சிட்டது. உடனே மிகுந்த அநுதாபத்துடன் விஷயமென்னவென்று வினவினேன்.

விஷயத்தை விளக்கினார். விளக்கும் பொழுது பத்திரிகாசிரியர்களின் பொதுவான மடத்தனத்தையும், தன்னுடைய கலையையறியாத எழுத்தாளர்களின் அயோக்கியத்தனத்தையும், இன்னும் இம்மாதிரியே அறிவின்மையின் பல ரகங்களையும் பலமாகத் தாக்கினார். இத்தாக்குதலில் உபயோகிக்கப்பட்ட வசைமொழிகள் யாவற்றையும் இங்கு விவரிக்க இடமுமில்லை; நேரமுமில்லை. அவற்றையெல்லாம் என் நண்பர் வெளியிட உத்தேசித்திருக்கும் 'வசையகராதி'யில் விரிவாகக் காணலாம். (அப்புத்தகத்தின் விமர்சனத்தை அவரே எழுதிப் புத்தகத்துடன் எல்லாப் பத்திரிகைகளுக்கும் அனுப்பப் போகிறாராம்.)

அவருடைய துடிதுடிப்பின் காரணம் அவர் கையில் படபடத்துக்கொண்டிருந்த ஓர் பத்திரிகைதான். அந்தப் பத்திரிகையின் சலசலப்பைக்கொண்டே அவ்வப்போது அவருடைய உணர்ச்சி வேகத்தை அளந்துகொண்டிருந்தேன். அதில் அவருடைய அருமையான, அழகான 'விமர்சகன் எவன்?' என்ற புத்தகத்தின் விமர்சனம் வெளிவந்திருந்தது. அவரிடத்தில் க்ஷாத்திரங்கொண்ட எவனோ ஒருவன் அதைப் படிக்காமலேயே விமர்சித்திருக்கிறான் என்பது அவர் கக்ஷி. உண்மையில், அந்த விமர்சனத்தில் பல உண்மைகளுக்கிடையே (இதை ஆத்திரப்பட்டுக்கொண்டிருக்கும் அவரிடம் எப்படிச்சொல்வது ?) சிற்சில அனாவசிய தாக்குதல்களும் இருந்தன. "பிரபல விமர்சகராகக்கருதப்பட்டுவரும் ஆசிரியரின் இப்புத்தகம் அவருடைய போலித்திறமையை அம்பலத்திற்குக் கொண்டுவந்துவிட்டது" என்று கடைசியில் காணப்பட்ட வரிதான் நண்பருக்கு அவ்வளவு ஆத்திரத்தை அளித்திருக்க வேண்டும். நான் அந்த விமர்சனத்தை வாசித்துக்கொண்டுஇருக்கும்பொழுதே அவ்விமர்சனத்தைப் பற்றி என் நண்பர் சொல்லிக்கொண்டுவந்தவிமர்சனம் எழுதக்கூடியதன்று.

இச்சமயத்தில் 'தபாலு'க்குச்சென்ற பையன் பல பத்திரிகைகளைக் கொண்டு வந்து கொடுத்தான். அவ்வளவு பத்திரிகைகளையும் அவரே வாங்கிக்கொண்டு பரபரப்புடன் ஒன்றையெடுத்து என் கையில் கொடுத்தார். கொடுத்துக் கொண்டே "இந்தப் பத்திரிகையைப் பாரும். அதில் என்னுடைய விமர்சனம் ஒண்ணு வெளிவந்திருக்கு. அதுன்னா விமர்சனம்? எல்லாப் 'பசங்க'ளும் அந்தமாதிரி எழுதிடமுடியுமோ? குட்டிக்கரணம் போடணும்..." என்ற சிபாரிசும் எழுத்தாளனின் ஏகபோகமான தற்பெருமையும் கலந்த வார்த்தைகளை வீசினார். வேறு வழியில்லாமல் அதை வாசித்தேன். உண்மையைச் சொல்லுகின்றேன். அப்பொழுதுதான் முதல் தடவையாக அவர் விமர்சனத்தை வாசித்தேன். விமர்சனம் வெகு நன்றாக இருந்தது!! என்னையே வாசிக்கச் சொல்லி அவர் கேட்டார். ஆகா அவர் முகத்தில் நான் வாசிக்க வாசிக்க எவ்வளவு விகாசம் ஏற்பட்டது!

"எழுத்து உலகத்திலேயே யார் என்று தெரியாத இவ்வாசிரியர் முதன் முதலாக ஓர் நாவல் எழுதியிருப்பது அவருடைய அசட்டுத் தைரியத்தைத் தான் காண்பிக்கின்றது." இதுதான் என் நண்பரின் விமர்சனத்தினுடைய முதல் வரி. இதோ நண்பரின் வியாக்யானம். "ஆம். குட்டிக்கதை, நிமிஷக்கதை, சிறுகதை என்றெல்லாம் எழுதிப் பல வருடங்கள் பிரயாசைப் பட்டுப் பேர் வாங்காமல் திடீரென ஓர் நாவல் எழுதுவது எவ்வளவு அயோக்யத்தனம்! அந்த அயோக்கியத்தனத்தின் அறிகுறியை—நாவலை—விமர்சனத்திற்கு வேறு அனுப்பிவிட்டான் மடையன்."

பார்த்தீர்களா! விருப்பு வெறுப்பில்லாமல் எவ்வளவு யோக்கியமாக என்னுடைய நண்பர் தமது விமர்சனத்தைத் துவக்கியிருக்கிறார்.

விமர்சனத்தின் வேறு சில பகுதிகள்: "நாவல்தான் ஏதோ கத்துக்குட்டியால் எழுதப்பட்டிருக்கிறதென்றால் அது ஊர் பேர் தெரியாத ஒருவரால் பிரசுரிக்கப் பட்டிருக்கிறது..."

"வெகு மட்டமான காகிதத்தில் புத்தகம் அச்சிடப்பட்டிருக்கிறது. ஒருதாம் புத்தகத்தைப் புரட்டுவதற்குள்ளாகவே புத்தகத்தின் அட்டைகள் இரண்டும் கையோடு வந்துவிட்டன என்றால் புத்தகத்தின் லக்ஷணத்தையோ அதில் அடங்கியுள்ள விஷயத்தையோ என்னவென்று கூறுவது!..."

"புத்தகத்தின் முதல் பக்கத்திலேயே 32 பிழைகள். புத்தகத்தில் 326 பக்கங்கள். அப்படியானால் புத்தகத்தில் 10432 பிழைகள் இருக்குமல்லவா? இம்மாதிரியான புத்தகத்தை எவன்தான் வாசிப்பான்?..."

விமர்சனம் இந்த ரீதியிலேயே போய்க்கொண்டிருந்தது. ஒரு இடத்திலேனும் புத்தகத்திலடங்கிய விஷயத்தைப்பற்றியே காணவில்லையே. எப்படிக் காண முடியும்? அவர் புத்தகத்தை வாசித்திருந்தாலல்லவா?

விமர்சனத்தை வாசித்து முடித்தேன். என்னையும் மீறி ஓர் களுக்கென்ற சிரிப்பு வந்துவிட்டது. நண்பர் "ஏன்" என்று கேட்டார்.

"ஒன்றுமில்லை. உங்களுடைய யோக்கியமான விமர்சனத்தையும் நீங்கள் முன்பு கூறிய அயோக்கியத்தனமான விமர்சனத்தையும் ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது விமர்சகர்களில் இவ்வளவு அயோக்கியர்களும் இருக்கிறார்களா ? என்று சிரிப்பு வந்தது" என்றேன்—குறிப்புப் பொருளுடன்.

நண்பர் "உங்களுக்கல்லவா உண்மையான யோக்கியதை தெரிந்திருக்கிறது!" என்று தட்டிக்கொடுத்தார். அளவு கடந்த சந்தோஷம்.

எனக்கு இன்னும் பல வருடங்களுக்கு "ஓசிப் படிப்பு" ஸ்திரமாகியது. "வாழ்க்கை முரண்" என்று வாய் முணங்கியது வெளியே வரும்பொழுது,

(சென்ற வாரத் தொடர்ச்சி.)




### "தொல்லை யின்பத் திறுதி கண்டாரே......"

"என்ன அம்மா! டாக்டர் ஐயா பன்னிப் பன்னிப் பேசிக் கொண்டிருந்தாங்க—" என்று நுழைந்தது மாவடு. அயர்ந்த சாவித்திரி நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

"மாவடு! உனக்கு இங்கே சம்பளம் கொடுக்கிறாங்களா?

"சம்பளம்-நான் ஏன் வாங்கறேம்மா! நான் சித்தே நாழிப் பேசினுப் போறுங்களே! ஐயமாரெல்லாம் காசைக் கக்கிடுவாங்க — என்னமோ சொல்றீங்களே.........

"டாக்டர் ஐயா கூடக் காசுக் கொடுப்பாரில்லையா?

"நிறையக் கொடுக்கப்பட்டவங்கதான் என்ன பண்றதுங்க — என்னதான் ஒவசாரம் பண்ணினுலும் ஐயா ஒரு மாதிரி ஏங்கித்தான் என்னைப் பார்க்கிறாங்க—நான் கண்ணை ஒரு சொழட்டு சொழட்டுவேனுங்க. டாக்டர் ஐயா மொவத்தைப் பாக்கணுமே! அப்படியே நாய்க்குட்டியைக் கட்டிக் குலுக்கிடுவாங்க! அப்பொ தோணுமுங்க......

"என்ன தோணும்......?"

"என்னை என்னுங்க வெட்கம் கெட்ட பொணம்னு நெனச்சுக்கிட்டீங்களா? சொல்ல முடியுங்களா? அதை?" என்று தலையாட்டம் கண்ட பம்பரம் போல் சுழன்று வெட்கத்திற்கு அபிநயம் பிடித்தது.

கொதிகண்ட பால்போல் சாவித்திரி களுக்கென்று சிரித்தாள். வாசுதேவன் விழித்துக்கொண்டு விட்டான்.

"சாவித்திரி! டாக்டர் வரவில்லை?"

"நான் போய் வரச்சொல்லுட்டுங்களா? என்று கிளம்பினது மாவடு ஒய்யார நடையுடன்.

"சாவித்திரி! எனக்குப் பாதி வியாதி போய்விட்டது."

"பாதிதானு?"

"ஆமாம் உன் கிலேசத்தைச் கூட அமுக்கி மாவடு குதூகலம் கொடுத்து விட்டதே! அப்பா! இப்போதான் உன்னைப் பார்த்தால் கொஞ்சம் நிம்மதியாக இருக்கிறது.

டாக்டர் நுழைந்தார்.

"சாவித்திரி! நாற்காலியை இழுத்துப் போடு" என்றான் வாசு.

"வேண்டாம்! நான் இழுத்துக் கொள்கிறேன். வலி எப்படி இருக்கிறது" — என்று கேட்டுக்கொண்டே நோயாளியைப் பரிசோதிக்க ஆரம்பித்தார் முல்லர். சாவித்திரி பக்கலில் நின்றுகொண்டு அவளறியாமலே தன் உள்ளச் சோதனைக்கு இடம் கொடுத்துக் கொண்டிருந்தாள்.

"இன்னும் இரண்டு நாள் பொறுக்க வேண்டும் என்றார் முல்லர்."

"இரண்டுநாளா?" என்று கலக்கத்துடன் கேட்டாள் சாவித்திரி.

"இரண்டு நாள் பொறுத்தால்தான் பக்குவமடையலாம்" என்று இழுத்தார் டாக்டர் — எது? சாவித்திரியின் மனதா? அப்படித்தான் அவனது கண் கோடிகள் குறிப்பிட்டன.

"ஸார் நீங்கள்தான் கவனிக்கவேண்டும். ஏதோ தர்மக்கேஸ்தானே என்று.."

"அசட்டையா? சாவித்திரி? என் அகாதியிலேயே அது கிடையாது."

"உங்களுக்கு அகராதியே வேண்டாம். எப்படியாவது........"

"என்னை நீ இன்னும் அறிந்து கொள்ளவில்லை......"

ஆமாம் டாக்டர் முல்லரின் செய்கையை நாகரீகத்தின் பிரதிபலிப்பாகக் கொள்ள முடியுமே ஒழிய மிருகத்தனமாக அதற்குள் எப்படி முடிவு கட்ட முடியும்.

"நான் வருகிறேன்" என்று காக்கையைப்போல் ஒரு பக்கமாகத்தலைகுனிந்து விட்டு வெளியேறினுர் முல்லர்.

"சாவித்திரி ஆச்சரியமாக இருக்கிறதே! இந்தக் கொலைகாரன் நெஞ்சில் கூட ஈரத்தைப் புகுத்திவிட்டாயே!

என்னது? கன்னுப்பின்னு வென்று நீங்களாக முற்கூட்டியே தீர்மானித்து விடுவதென்றால்......

"முற்கூட்டித் தீர்மானிக்கவே மாட்டேன். தீர்மானித்து விட்டால் மாத்திரம் என்னைப் படைத்த பிரமன் வந்தாலும் மாற்ற முடியாது,"

"இதெல்லாம் நல்லத்திற்கா?"

"என்னவோ அவனைக் கண்டால் எனக்கு ஆத்திரம் பற்றிக்கொண்டு வருகிறது.

"அந்த ஆத்திர வெப்பம் தாக்கி, அவர் மனதிலே வியர்த்துவிட்டாற்போலிருக்கிறது அதுதான் ஈரம் கண்டிருக்கிறது.

"இல்லை. உன் குளிர்ந்த மனசுதான் பனி படருகிறாப்போலே அவன் மனத்திலே ஈரம் காத்திருக்கிறது."

"அப்போ குளிர்கண்டா — கல்லானு போய்விடும்!

"எப்படி வேண்டுமானுலும் இருக்கட்டும்! உன்னைப்பற்றியோ; அப்பா அம்மாவைப் பற்றியோ கவலை மட்டும் இல்லாமலிருந்தால் இப்படியெல்லாம் மாட்டிக்கவே மாட்டேன்......

"அந்த வாய்க்காலிலேதானே?"

"இத்தப் படுபாவி கையிலேதான்!

உங்களுக்குத் தெரியவில்லையா? அப்பா அம்மா என்ன கவலைப்படுகிறு தெரியுமா? அப்படிப் பேசுகிறேளே அவாளுக்காகவாவது.........

(ஏன்? உனக்காகவும் கூடத்தான்)

"இந்த வாட்டுப்பயல் கையாலே ஆபரேஷன் பண்ணிக்கப்போகிறேன். கவலைப்படாதே......" என்று அவள் முன்னுச்சியைத் தடவக் கைதூக்கினுன். புரண்டதில் புண்ணிடம் திருகியது ஹாவென்றலறிவிட்டான்.

மறைவுறும் உணர்ச்சியை சுதாரித்துக்கொண்டு வலிகண்ட இடத்தைத் தடவிக்கொடுத்தாள் சாவித்திரி. தன் வேதனையை நெட்டித்தள்ளும் பெருமூச்சை அடக்கிவிட்டாள். அது கண்ணில் வழிபெற்று ரத்தத்தை நீராக்கி அலைமோதியது. வாசுதேவன் அவள் வேதனையை அறியாமலில்லை. அவன் மனதில் பெருக்கெடுத்த கவலைச் சுழல் மலைகளிடையே தோன்றும் குமிழிகளைப் போல் எகிறியது. "நான் இறந்துவிட்டால் இவள் கதியென்ன" என்ற பதிலற்ற சூன்ய வானத்தையே முட்டிவிட்டது.

"உடம்பை அலட்டிக் கொள்ளாதீர்கள்."

"எனக்கும் தெரிகிறது" என்றான். அவளது முன்னுச்சி நெற்றி மோவாய் கன்னம் உதடு......என்று அவன் விரல்கள் பாவிக்கொண்டிருந்தன.

ஃ ஃ ஃ

### நெஞ்சிலுரமு மின்றி நேர்மைத்திறமு மின்றி வஞ்சனை சொல்வாரடி....!

"கம்பௌண்டரையா! டாக்டர் எங்கே?

"எதற்கு?'

"பார்க்க வேணுமே!"

"பார்க்க முடியாது"

"ஒரே வவுத்து வலியாயிருக்குதே — நான் என்ன சொல்வேன்?"

"இங்கேவா! நான் மருந்து கொடுக்கிறேன்"

"ஐயோ! நீங்களா?

"என்னைப்பார்த்தா வைத்யம் பார்க்கிறவராத் தோன்றவில்லையோ!

"இல்லீங்க........"

"அடசத். இங்கே வா! நான் கொடுக்கிற மருந்து எப்படி இருக்கிறது பார்! படித்துப் பட்டம் கட்டிக் கொண்டு வந்துவிட்டால் போதுமா? அனுபவம் வேண்டாமா?

அப்படின்னு ஐயாவுக்கு ஒண்ணும் தெரியாதுங்களா?

"இதிலே சந்தேகம் வேறையா?" இதைப்பார் டாக்டரையா, எழுத்துப் புரியாமல் கிறுக்கிறார்களே! ஏன் தெரியுமா? வியாதியே அவர்களுக்குப் புரிவதில்லை. வியாதி புரிந்தாலும் மருந்து புரிவதில்லை.

"ஆமாங்க! அது தெரிஞ்சாலும் அது ஆசுபத்திரிலே இருக்குதான்னு புரிகிறதில்லீங்க! ;"

ஆம். அதுதான். அதனுலே ஏதோ கிறுக்கித்தள்ளி விடுகிறார்கள். இங்கே வந்த உடனே "என்ன உடம்ப" என்று கேட்டு, இருக்கிற மருந்திலே பொறுக்கிக் கொடுத்துக்கொண்டிருக்கிறேன். அது தெரியாமல் நீ என்னவோ உளருகிறாயே;

"ஆமாமுங்க! தெரியாதுங்களா? நீங்கள் மட்டும் இல்லாட்டி......"

"டாக்டர் இருக்கிற லட்சணத்திற்கும் ஆஸ்பத்திரி இருக்கிற லட்சணத்திற்கும்..

"நீங்க இருக்கிற லட்சணத்திற்கும் பொருத்தமில்லியாங் காட்டியும் —" என்று அங்கு வந்த மாவடு முத்தாய்ப்புவைத்தது."

"அ— தங்கமே! வந்துவிட்டாயா?"

"என் வெங்காரமே! ஆசைக் கட்டில்லை!" என்று கம்பௌண்டர் மோவாய்க் கட்டையைப் பிடிக்க வந்தது."

"அட சத்! இதெல்லாம் டாக்டர் கிட்ட வைத்துக்கொள்!"

"என்னு நெனச்சுக்கிட்டே நீ! உனக்கும் கேடுக்கெட்டுப் போயிடுத்தா இந்தக் கிளி!" என்று மோட்டார் ஹார்ன் குரலில் அழ ஆரம்பித்தது.

"இதேதடா! இது! ஏ மாவடு! இந்தா என்னைப்பார். இந்தக் கடிதாசிலே ஒரு முத்தம் தயாரா வைத்திருக்கிறேனே!

"எங்கே? என்று அழுகை நின்று ஆவல் ஒலமிட்டது."

ஆர்ரோயன்

"தருகிறேன்! அந்தக் கோடிவார்டிலே என்ன சங்கதி?'

"தெரியாதுங்களா? ஐயையோ மறந்துட்டேனே ஐயா எங்கே?"

"ஏன்"

"அம்மாளுக்குத் தோட்டம் சுத்திக் காமிக்கச் சொன்னுர்."

"அதுக்கென்ன?"

"அம்மாளைத் தோட்டத்திலேயே உட்டுட்டு ஒடியாந்துட்டேன்.

"எதற்காக?"

"ஐயா இன்னேரத்துக்கு வரச்சொன்னுங்களே என்னை!"

"உன்னையா?"

"ஆமாம் இன்னிக்குக் கட்டாயம்..." என்று தன் தோள் வாய்ப்பட்டையை முத்தமிட்டுக் காண்பித்தது.

"அப்படியானுல் நான் கடிதாசிலே கொடுத்தது?"

"அதையும் கொடுங்க!"

துப்புக்கெட்டா ரெட்டைப்பங்கா?"

"இல்லாட்டி வாணும். நான் போறேன்."

"சேசே இந்தா இது வீணுப்போகும்" என்று ஒரு கசங்கிய கடிதத்தை கொடுத்தான் கம்பௌண்டர். அதைக் குலுக்கி மினுக்கி ஆட்டிக் கொட்டியது மாவடு.

"என்ன கம்பௌண்டர். இது என்ன கூத்து?' என்று கேட்டுக்கொண்டே டாக்டர் வந்தார்.

"மோவணு ராசாகிட்டேதான் கிளம்பிறேன்" என்று அவர் பக்கம்வளைந்தது மாவடு.

"சீ! போ! என்று விட்டுத் திரும்பியவர் அப்படியே ஒரு கணம் நின்றார்- காம்ப்வுண்டின் ஓரத்தில் உள்ள மாமரத்தடியில் நின்ற சாவித்தியின். உருவம் இழுத்தது.

— (தொடரும்) —

**குடும்பச்சந்தை** (சென்ற வாரத் தொடர்ச்சி)

# சொந்தக்கார சீனுவாசய்யர்

**தி. ஜானகிராமன்.**



**— ரகளை —**

*ரங்கசாமி:* என்ன, தாத்தா, மரியாதையா இருக்கமாட்டேள்போலேருக்கே. கிரிமினல் கம்ப்ளெயிண்ட் கொடுத்து உம்மை ஆட்டிவைத்துவிடுவேன் தெரியுமா. வாடகை ஜாஸ்தி வேணும்னு வாயைத் திறந்து கேட்கிறது. நான் ஆபீஸுக்குப்போன அப்புறம் எலக்ட்ரிக் கம்பியை வந்து அறுத்துட்டுப்போயிருக்கிறீரே. பொம்மனாட்டி மாத்திரம் இருக்கறபோது என்னமாங்காணும் என் வீட்டிற்குள் நுழைந்தீர்?

குட்டை: என்ன, ரங்கசாமி, இது என்ன புதுசா இருக்கு?

*ரங்க:* **ஆமாம்,** மாமா, வாடகை இரண்டு ரூபாய்கூட வேணும்னு மூஞ்சிலே வீசி எறிஞ்சுட்டுப்போறேன். நான் ஆபீஸுக்குப் போன கொஞ்ச நாழிக்கெல்லாம் ஒரு ஸ்டூலை எடுத்துண்டு வந்து வாசற்படிக்குள்ளே கொண்டு வச்சுண்டு ஏறி நின்னுராம். அவளுக்கு ஒண்ணும் புரியலே. கத்தியை எடுத்துண்டு கம்பியை அறுக்க ஆரம்பிச்சிருக்கார். அவள் எதுக்காக அறுக்கறேள்னு கேட்டதற்கு பதிலே பேசலையாம். இரண்டு மூன்றுதரம் கேட்டப்புறம் எல்லாம் காரணமாத்தான்னு பதில் சொல்லிப்பிட்டுக் கம்பியை அறுத்துட்டு ஸ்டூலைத் தூக்கிண்டு போயிட்டாராம். காரணம் என்ன, காரணம்? இரண்டு ரூபாய் காசுக்குத்தான் ஆட்டமெல்லாம்.

குட்: நீர் சொல்றத்தைப் பார்த்தா, வெறுமே நயமா கேட்டிருந்தாலும் வாடகை இரண்டு ரூபா கூடக் கொடுத்திருப்பீர், இப்ப குடுக்கமாட்டேள் போலேருக்கே.

*ரங்க:* குடுக்கறதா? இனிமேலா? காக்காசு பேருமோ எங்கிட்டேருந்து? (காலேஜ் மாணவன் நீலு ஓடிவருகிறான்.)

*நீலு:* ரங்கசாமி ஐயர், தண்ணீர் வாலை, தண்ணீர் வாலைன்னு சொல்லிண்டிருக்கமோல்லியோ, அதெல்லாம் ஒண்ணுமில்லை. பூட்டுப்போட்டு பூட்டி வச்சிருக்கார் தாத்தா.

ப. வாத்தி: என்னது! குழாய் பூட்டி வச்சிருக்கா? முனிஸிபாலிட்டிக்கு சொல்லி அனுப்பிச்சிருக்கேன், சொல்லி அனுப்பிச்சிருக்கேன்னுட்டு நாலுநாளாய் சொல்லிண்டிருக்காரே.

குட்: அவர் அத்வைதம், வேதாந்தம் எல்லாம் வாசிக்காரோல்லியோ? பந்தங்களையெல்லாம் அறுக்கறதுக்கு முன்னாடி கம்பி, கிம்பி, எல்லாத்தையும் அறுத்துப் பழக்கிக்கிறார்.

ப. வாத்தி. மனைவி: அட பாவி! குழந்தைகளெல்லாம் நாலு நாளா தண்ணி இல்லாம சாகறதே.

(இதற்குள் வீட்டிலிருப்பவர்கள் எல்லோரும் கிணற்றடியில் கூடிவிடுகிறார்கள்.) சீனுவாசய்யர் கதவைச் சாத்திண்டு மாடிக்குப்போய் ஜன்னல் பக்கம் நின்று கத்துகிறார்.)

**சீனு,** உங்களுக்கெல்லாம் நல்லத்துக்குக் காலமில்லே இப்போ. (அடுத்த வீடு, அண்டைவீட்டுக்காரர்கள் வந்து கூடுகிறார்கள். 'என்ன, என்ன?' என்று பரபரப்பாக கேள்விகள் எழுகின்றன.)

*ரங்க:* இதோ பாருங்கோ, ஜன்னலுக்குப் பின்னாலே நிற்கிறதை, கோபுர வஸ்து மாதிரி.

(எல்லோரும் மாடியைப் பார்க்கிறார்கள்.)

ப. வா. மனைவி: இந்தப் பிராமணன் லேசுப்பட்டவரில்லே மாமி. பாபி. குழந்தைகளெல்லாம் தண்ணியில்லாமே அடுத்தாத்துக்குப் போய்ப் போய் குடிச்சுட்டு வறதுகள்.

இன்னொரு ஸ்திரீ: எங்காத்திலே அவர் வந்து இரண்டு தடவை கடைக்குப் போய் சோடா குடிச்சுட்டு வந்தார். என்ன பண்றது. தோண்டியிலே கொஞ்சம்தான் ஜலமிருந்தது. அதுவும் கலங்கல். நீ சத்திரத்துக்குப் போய் ஜலம் கொண்டு வர்ரத்துக்குள்ளியும் எனக்குத் தாங்காதுன்னுட்டு கடைக்குப் போய் சோடாவோ என்னமோ வாங்கிக் குடிச்சுட்டு வந்தார்.

(பாட்டு வாத்தியார் வருகிறார்.)

பா. வா. மனைவி: (கும்பலைப்பார்த்து) அன்னிக்கு ஒரு நாளைக்கு விறகு வாங்கிண்டு வந்து கிணத்தங்கரைக்கிட்ட செத்த உலரட்டும்னுட்டு வச்சுட்டுப் போனேன். மத்தியானம் ஒரு சத்தம் கேட்டுதே பாரு! இங்க யாரு விறகு வச்சிருக்குன்னுட்டு. நான் கிடுகிடுன்னு ஓடிப்போய் நான்தான் செத்த காயட்டும்னு வச்சிருக்கேன்னு சொன்னேன். வேணும்னு உன் தலையிலே தூக்கி வச்சுக்கோ. உங்க வீட்டு விறகு காயப் போடறத்துக்கு இது இடம் இல்லேன்னு ஒரு எரச்சப் போட்டுது பிராமணன். நான் அப்படியே நடுங்கிப் போய்ட்டேன்.

பா. வாத்தி: பாருங்கோய்யா, பொம்மனாட்டிக்கிட்ட இந்த மாதிரியா வார்த்தை சொல்றது, வயசானவராச் சேன்னு பார்த்தா...

குட்: நீரென்னய்யாது, வயசு வயசுன்னு, வயசு பிராணனை வாங்குகிறீர். கொல்லைப்பக்கத்திலே எருமை மாடு கட்டிருக்கானே பால்காரன், அதுக்கு எட்டு வயசு ஆயிடுத்தாம். ஆனா அது நிற்கிற இடம் சாணியும் கூளமுமாத்தானிருக்கு.

ப. வாத்தி: நீர் குழாயைத் திறக்கப் போறீரா இல்லையாங்காணும்?

கும்பலில் ஒருவர்: நீங்க இவ்வளவு சொல்றேளே ஒழிய அவர் அசையற வழியாயில்லையே.

குட்: இதுக்கெல்லாம் அசஞ்சுட்டா ஞானம் அடையமுடியுமா? தைரியம் இப்படித்தானே பழகிக்கணும்.

ப. வாத்தி: நாலு நாளா தண்ணியில்லாமே செத்துப்போயிண்ட்ருக்கோம் ஸார். முதல் தேதியன்னிக்கு கரூரா அவன் கையிலே வாடகையைக் கொடுத்துடறமோல்லியோ? அதுக்குப் பலன் இதெல்லாம் மூஞ்சியிலே காறித் துப்புங்கோ, ஐயா.

(கோடிவீட்டு வாமனராவ் வருகிறார்.)

வாமனராவ்: என்ன ஸார் இது. என்ன ரகளை?

*ரங்க:* ஸார், நாலு நாளாத் தண்ணி கிடையாது. குழந்தைகள், பொம்மனாட்டிகளெல்லாம் கிடந்து தவிக்கிறா. காலமே நான் ஆபீஸுக்குப் போன அப்புறம் எலக்ட்ரிக் கம்பியை அறுத்துட்டுப் போயிருக்கார் வீட்டுக்காரர்.

வாமன: என்ன காரணம்?

குட்: காரணமா, இந்த அயோக்யப் பயல் கிருபணன் ஈச்வரனிருக்கானே அவனுக்குத்தான் தெரியும்! முதல் தேதி பிறந்ததும் அவர் கேட்கறதுன்னுகூட வச்சுக்காம நாங்களாகக் கொண்டுபோய் வாடகையைக்கொடுத்துடறம். வாடகை ஒசத்தறத்துக்கு இந்த ராஜதந்திரத்தைக் கையாண்டிருக்கார்.

வாமன: சரி, உங்களுக்குத் தண்ணி தானேவேணும்? இந்தமாதிரி ரகளை பண்ணினால் அவர் என்ன பண்ணுவா?

*ரங்க:* ரகளையா? தண்ணியில்லாம செத்துப்போயிண்டிருக்கோம் ஸ்வாமி.

பா. வாத்தி: என் வீட்டுக்காரிக்கிட்டக்க இந்த மனுஷர் என்ன சொன்னார் தெரியுமா? கிணத்தடியில் விறகு காயப் போட்டிருந்தா அவ. வேணும்னு உன் தலையிலே தூக்கி வச்சுக்கோன்னாராம். அதுக்கு மன்னிப்பு கேட்டுக்கட்டும்.

வாமன: இப்படி தலைக்குத் தலை சத்தம் போட்டால் நான் என்ன பண்றது?

ப. வாத்தி: ஸார், குழாயைத் திறக்க அவரிண்ட சொல்லமுடியுமா நீங்கள்?

வாமன: நீங்க இப்படி சத்தம்போட்டால் எப்படி நடக்கும்? நான் போய் அவரிடம் சொல்லிப் பார்க்கிறேன்.

பா. வாத்தி: என் வீட்டுக்காரியை அப்படி சொன்னாரே, அதுக்கும் மன்னிப்புக் கேட்டுக்கட்டும்.

*ரங்க:* ஸார், ரகளை ரகளைனுன் நாங்க பண்றதுதானே உங்கள் கண்ணில் படுகிறது. நீங்களே உள்ளே வந்து உங்க கண்ணாலேயே பாருங்கோ. குழாயிலே ஜலம் வறதா? என் வீட்டு விளக்கு எரியறதா? நாங்களெல்லாம் பொய் சொல்றோமா? எல்லாத்தையும் நீங்களே தெரிஞ்சுக்கோங்கோ, உம், வாங்கோளேன்.

வாமன: அதெல்லாம் சரி ஸார். அதைப் பார்ப்பானேன்? நீங்களெல்லாரும் கூட்டம் கூட்டாமே உள்ளே போங்கோ. நான் போய் சொல்றேன்.

*ரங்க:* ஸரி, எப்படியானு சொல்லுங்கோ, எங்களுக்குத் தண்ணி வந்தால் சரி.

பா. வாத்தி: என் வீட்டுக்காரியை சொன்னத்துக்கும் மன்னிப்புக் கேட்டுக்கச் சொல்லுங்கோ.

சீனு: (மேலேருந்து) ராயர்வாள், நீங்க எதுக்காக இங்கே வறேள்? அவா எரச்சல் போட்டா உடனே நீங்க நம்பி விடுகிறதா அதை?

வாமன: (கால் அதோடு நின்றுவிடுகிறது மெதுவாக.) ஸார், அவர் சுபாவம் எனக்குத் தெரியும் ஸார், சொன்னாக் கேட்கமாட்டார். நான் போகிறேன், எனக்கு எதுக்கு வம்பெல்லாம்?

குட்: என்னய்யாது, திரும்பிவிட்டார்! அவர் வந்ததைப் பார்த்ததும் இன்னும் இரண்டு நிமிஷத்துக்கெல்லாம் குழாயில் ஜலம் வந்துடப்போறது, எடுத்துக் குடிக்கலாம்னு சந்தோஷப்பட்டுண்டிருந்தேனே.

(வாமன ராவ் போகிறார். கும்பலிலுள்ள பையன்கள் ஹோ, ஹோ என்று கத்துகிறார்கள்.)

*ரங்க:* ஓய், குழாயைத் திறந்துவிடப் போகிறீரா? இல்லாட்டா உம்மை ஒரு கை பார்த்துடட்டுமா?

**சீனி:** பாரு, பாரு, அதுக்குள்ளே உன்னை ஒரு கை பார்த்துவிடறேன். ஓய், வெங்கிட்டு, வெங்கிட்டு! என்று தன் மைத்துனனைக் கூப்பிடுகிறார்.

வெங்கிட்டு: (உள்ளேயிருந்து) என்?

**சீனு:** போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் கலாட்டா நடக்கிறதுன்னு சொல்லி ஒரு போலீஸ்காரனைக் கையோடு அழைச்சிண்டு வா.

*ரங்க:* போலீஸ் வரட்டும்.

பா. வாத்தி: ஸ்டேஷனுக்கு அழைச்சிண்டு போகட்டும்.

குட்: ஸார், என் அனாவசியமா நாம கத்தணும்? போலீஸ் வரட்டும், சீனுவாசய்யர்வாள் கம்ப்ளெய்ண்ட் கொடுக்கட்டும். நாமும் கொடுப்போம்.

*ரங்க:* (கும்பலைப் பார்த்து) வயிற்றை எரியறது ஸார் இவன் பண்ற அக்ரமங்களையெல்லாம் நெனச்சா. ரோட்டிலே லைட்டுப் போட்டப்புறம் இஞ்சயும் லைட்டைப் போடுவான். சில நாளைக்கு ஒன்பது ஒன்பதரை மணியாகும் ராத்திரி ஆபீஸிலிருந்து வர. கொஞ்ச நாழிதான் ஆகும் சாப்பிட. பாதி சாப்பிட்டுண்டே இருப்பேன். பொக்குன்னு விளக்கு அணைஞ்சுபோயிடும்.

காலேஜ் பையன் நீலு: ஆமாம் ஸார், பரீட்சைக்கு முதல்நாள் மும்முரமா வாசிச்சிண்டிருக்கேன். திடீரென்று விளக்கு நின்னுபோயிடுத்து. நான் சாயங்காலம் கிரிக்கெட் விளையாடறதைக்கூட நிறுத்திவிட்டேன். அப்புறம் வந்து வாசிக்கமுடியல்லே. அதான் பத்து மணிக்கே வீடு இருட்டு மகாலாப் போயிடறதே.

கும்பலில் ஒருவர்: அவன் பெரிய கார்க்கோடகன் ஐயா. நான் மூணு வருஷம் இவன் கையிலே படாதபாடு பட்டுத்தானே வேறே வீடு மாத்திண்டு போனேன்.

*ரங்க:* அது வீட்டுக்கு வரபோது எனக்கு என்னமாத் தெரியும்?

ஆனா வந்த நாலைஞ்சு நாளைக்கெல்லாம் ஒரு ஸ்நேகிதன் சொன்னான். 'அங்கே எங்கேடா போய்ச் சேர்ந்தே? குடிவரும்போது பிரமாதமா உபசாரம் எல்லாம் பண்ணுவன். அப்புறம் பாவத்தைக் கொட்டிப்பனே கிழவன்'னு சொன்னான் அவன். எல்லாம் போகப்போகன்னா தெரியறது.

(திடீரென்று கும்பல் விலகுகிறது. போலீஸ்காரன் வருகிறான்.)

போலீஸ்: என்ன ஸார் கலாட்டா இங்கே?

*ரங்க:* ஐயா, வாடகை கூட வேணுமோ என்ன எழவோ, குழாயைப் பூட்டி வச்சுட்டான். அதோ நிக்கறான் பாரு ஜன்னலுக்குப் பின்னாலே அந்த மகானுபாவன், வீட்டுக்காரன். குழந்தை குட்டியெல்லாம்தண்ணியில்லாம சாறது. கையலம்பக் காலலம்பப் பொட்டுத் தண்ணி கிடையாது.

ப. வா: அவர் ஆபீஸுக்குப் போனப்புறம், பொம்மனாட்டிமாத்திரம் இருக்கும்போது எலக்ட்ரிக் வயரை அறுத்துட்டுப் போயிருக்கானும்.

பா. வா: போய், உங்க இன்ஸ்பெக்டரிடம் சொல்லும் குழாயைத் திறந்துவிடச் சொல்லி. போய் அவரை அழச்சிண்டு வாரும். விசாரிக்கட்டும். எங்க வீட்டுப் பொம்மனாட்டி முந்தாநாள் இஞ்ச விறகு காயப்போட்டிருந்தா. அவங்ககிட்ட வந்து 'வேணும்னு உன் தலையிலே தூக்கி வச்சுக்கோ. இஞ்ச வைக்காதே'ன்னான். அதுக்கென்ன சொல்றீம். போய் உம்ம இன்ஸ்பெக்டரை அழச்சிண்டு வாரும்.

போலீ: ஓய் சும்மா இரையா. உன் வீட்டு வேலைக்காரன் இல்லே நான். விசாரிக்கத்தானே வந்திருக்கேன். என்னமோ வாள் வாள்னு கத்துறியே?

பா. வா: நான் கத்தலை. நன்னா விசாரியும். (ஒதுங்கிப் போய்விடுகிறார்.)

— (அடுத்த பக்கம் பார்க்க.) —

 முன் பக்கத் தொடர்ச்சி.

## சொந்தக்கார சீனுவாசய்யர்

★

ரங்க: (மேலே பார்த்து) போலீஸ் வந்தவுடனே சாவியைக் கொடுத்தனுப்பறுன் பாருங்கோ. ஓய், மாது, போம், போம்; குழாயைத் திறக்கவிடாதேயும், கான்ஸ்டேபில் பார்த்தாகணும்.

(கான்ஸ்டேபில் மேலே பார்க்கிறன். சீனுவாசய்யரின் இடது கண் ஒரு விநாடி மூடித் திறக்கிறது.)

போலீஸ்: என்னையா? இவங்க சொல்றது நிஜம்தானு?

சீனு: இஞ்ச வாரும், சொல்றேன். (கான்ஸ்டேபில் உள்ளே போய் மாடிக்குப் போகிறன். அவனை அழைத்துக் கொண்டு கதவைச் சாத்தித் தாளிட்டுக் கொள்கிறர் சீனுவாசய்யர்.)

ரங்க: ஓய், கீழே வந்து உம்ம கம்ப்ளெயின்டைச் சொல்லும். கதவைச் சாத்திண்டு அப்படி என்ன ரகஸ்யம்?

ப. வாத்தியார் மாது: குழாய்க்கிட்ட ஆளே இல்லையே, பூட்டினபடிதான் இருக்கு.

ரங்க: நான் கத்தின கத்தலில் பயந்துண்டிருப்பான்.

(வெங்கிட்டு சட்டையைப் போட்டுக் கொண்டு வெளியே போகிறன். சற்றுக் கழித்துப் போலீஸ்காரன் வெளியே வருகிறன்.)

போலீஸ்: ம். உங்க வீட்டு குழாயையெல்லாம் பார்க்கணும்.

ரங்க: வந்து பாரும்.

பா. வா: எங்க வீட்டுக்காரியை அதுமாதிரி மரியாதைக் குறைவாப் பேசினுனே? அதுக்கென்ன சொன்னுன்?

(போலீஸ்காரன் ஒவ்வொரு போர்ஷனுக நுழைந்து பார்க்கிறன். ஒரு குழாயிலும் தண்ணீர் வரவில்லை.)

போலீஸ்: இதுக்கெல்லாம் போலீஸ் ஒண்ணும் செய்யமுடியாதே ஸார். முனிஸிபாலிடிக்கில்லே புகார் கொடுக்கணும். நான் வாணு ஒண்ணு செய்யுறேன். அந்த ஆளுதானே கம்ப்ளெயின்ட் கொடுத்தாரு. அவரை ஸ்டேஷனுக்கு அழச்சிட்டுப்போய் மிரட்டி அனுப்பிக்கிறேன். அப்புறம் ஒழுங்காயிருப்பாரு.

ரங்க: அதானும் செய்யுங்க ஸார்.

போலீஸ்: (மேலே பார்த்து) ஸார், செத்த ஸ்டேஷன்வரைக்கும் வந்திட்டு வாங்க.

சீனு: ஏன்?

போலீஸ்: நீங்கதானே கம்ப்ளெயிண்ட் கொடுத்தது?

சீனு: நான் இல்லையே? வெங்கிடராமய்யர்னு இன்னெருத்தர்ன.

ரங்க: அவன் மச்சினன் சார் அவன்.

போலீஸ்: அட, பலே ஆளாயிருப்பார்போலிருக்கே. அவர் எங்கே?

சீனு: கும்பகோணம் போயிருக்கார்.

போலீஸ்: அட!

ரங்க: எல்லாம் பொய், பொய் ஐயா. அவன் வக்கீல் சுண்டு சாஸ்திரிகிட்ட குமாஸ்தாவா இருக்கான். அவர் வீட்டுக்குத்தான் போயிருப்பன்.

போலீஸ்: போதுவிடிஞ்சா இதே தொழிலாப்போச்சு சாமி. இந்த உலகம் முளுக்க இந்த வீட்டுப்பஞ்சம் வந்திரிச்சுப்போலிருக்கு. எங்க போங்களேன், இந்த சண்டைதான்.

குட்டை: அதுக்காக மத்றதெல்லாம் நிக்கலேயே. குழந்தைகள்ளாம் முன்னைவிட நிறையான்னு பிறக்கிறப்போலிருக்கு இப்ப.

போலீஸ்: நீங்க எத்தனை மாசமா இந்த வீட்டிலே இருக்கீங்க?

ரங்க: நான் வந்து ஒரு வருஷமாச்சு.

குட்: நான் வந்து ஆறு மாசமாயிடுத்து.

ப. வாத்தி: நான் நாலஞ்சு வருஷமாயிருக்கேன். அப்ப நாலு குடிதான் இங்கே. இப்ப என்னடான்னு, கொத்த வால்சாவடியா அடிச்சுப்பிட்டான் மகராஜன்.

போலீஸ்: எத்தனை நாளா இந்தத் தகராறெல்லாம்?

ப. வா: எல்லாம் இப்ப ஒரு மாசமாத்தான். குதுரை வச்சு குந்தாணியை வச்சு, மண்கண்ட இடமெல்லாம் காரையைப் பூசி பதினுறு குடி வச்சாச்சு. அதுலே வர காசு போருது போலிருக்கு. இப்ப வாடகை நாலு காசு கூட வேணுமோ என்னமோ. அதுக்குத்தான் இப்படி கண்ணில் விரலைக் கொடுத்து ஆட்டுகிறன். போரும், போரும் ஐயா, ஈச்வரன் முன்னலே இந்த வீட்டை விட்டுக் கிளப்பிவிடணும்.

குட்: நீர் வேணுங்கிறதை கொடுக்கமாட்டான் ஐயா? அவன்தான் அயோக்யப்பயலாச்சே, அந்த ஈச்வரன்!

போலீஸ்: எனக்கு ஒண்ணே ஒண்ணுதான் சாமி, இந்த ஆசாமியை எப்படியாவது ஆட்டி வச்சிடணும். இந்தத் தடவை ஆள் அகப்பட ஒண்ணும் வழியில்லாம போயிரிச்சு. ஆனு, இனிமே, எதானும் தகராறு வந்திருச்சுன்னு, உடனே எனக்கு ஒரு வார்த்தை சொல்லி அனுப்பிச்சிருங்க. ஒரு கை பார்த்து விட்டுடறேன்.

ரங்க: எனக்கு அதுதான் ஆசை. ஒரு நாளைக்காவது, ஒருமணி நேரமாவது இவனைப் 'பள்ளிக்கூட'த்திலே வச்சுப் பார்த்துடணும்.

போலீஸ்: கவலைப்படாதீங்க. ஒரு நாளைக்கு அகப்பட்டுக்காமலா போப்போருரு...ம்...நான் வரட்டுமா?

ரங்க: சரி. (போலீஸ் போகிறன்.)

### வெற்றிகரமான...?

குட்: (சற்றுக் கழித்து) ரங்கசாமி, சாவி எதுக்காகக் கொடுத்தனுப்பிச்சார்னு தெரியறதா இப்ப?

ரங்க: எதுக்கு?

குட்: குழாயைத் திறக்கறத்துக்கு இல்லே. பெட்டியைத் திறக்கறதுக்கு. இப்ப போலீஸ் வாயை மூடியாச்சு பாரும். அவன் இரண்டு கட்சிக்கும் ஒக்கப் பாடிவிட்டுப் போயிட்டான்.

பா. வாத்தி: (மெதுவாக) இப்ப என்ன பண்ணுகிறது?

ரங்க: பண்ணுகிறது என்ன குழாயை ஒரு கோடாலியை எடுத்துண்டு உடைக்கிறது.

ப. வாத்தி: செஞ்சுடுவோம். நல்ல வெட்டிரும்பும் கடப்பாரையும் இருக்கு எங்கிட்ட.

பா. வாத்தி: அப்படி அவசரப்பட்டிண்டு உடைக்கலாமா?

ரங்க: நீங்க என்ன சார், பயந்து பயந்து சாகறேள்!

குட்: இல்லே, ரங்கசாமி, அவர் சொல்றது வாஸ்தவம்தான். முனிஸிபாலிட்டிக்கு ஒரு வார்த்தை தெரிவிச்சுடுவோம், இதுமாதிரி தண்ணியில்லாம சாகிறேம், அதனுலே குழாயை வெட்ட வேண்டிய நிர்பந்தம் வந்துடுத்து. இதுக்கெல்லாம் வீட்டுக்காரன்தான் பொறுப்பாளி என்று தகவலைத் தெரிவிச்சுட்டு அப்புறம் குழாயை உடைக்கணும்.

ப. வாத்தி: அதுதான் சரி.

ரங்க: இப்பவே எழுதிவிடலாமே.

குட்: ம்...

ரங்க: நான் போய் பேபர், மை, பாட் எல்லாத்தையும் கொண்டுவரேன்.

குட்: விளக்கு இல்லையே. கள்ளைக் குடிச்ச குரங்குக்குத் தேள் வேறு கொட்டின சமாசாரமான்னு இருக்கு. இத்தனை ரகளைக்கப்புறம் நமக்கு வெளிச்சம் கொடுத்துடுவனு அவன்?

ப. வாத்தி: பாதகமில்லே. நான் அகல்லே நல்லெண்ணெய்விட்டு எத்திண்டு வந்துடறேன்.

ரங்க: சரி. சட்டுன்னு வாங்கோ.

(பள்ளி வாத்தியார் மாது போகிறர்.)

குட்: இந்த வயிற்றெரிச்சலை எங்கே சொல்வது? குழாயிருக்கு; தண்ணியில்லே. கம்பியிருக்கு; விளக்குயில்லே இந்த ஈச்வரனை என்ன பண்றது, அந்த அயோக்ய கிருபண ஈச்வரனை? அப்பாப்பா, இந்த ஈச்வரனைப்போல அயோக்யனை இந்த ஜகத் முழுவதும் நான் பார்த்ததில்லே.

(உள்ளே சீனுவாசய்யர் கனைக்கிறர்.)

(முற்றும்.)

